# அணையாத் தீபம்

## குலோத்துங்கன்




பாரதி பதிப்பகம்
108, உஸ்மான் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.
த.பெ. எண்:4984 போன்:4340205



என்னை வளர்த்தாரின், இரவு பகலாகத்
தன்னை அழித்தெனக்குத் தடம் சமைத்த தந்தையரின்,
அன்னை எனும் பெயரின் அழியாத காவியத்தின்
பொன்னை நிகர்த்த பதம் போற்றிப் படைக்கின்றேன்.

# முன்னுரை

'அணையாத் தீபம்' என்ற தலைப்பில் வெளிவரும் இந்நூல் எனது கவிதைகளின் ஆறாவது தொகுப்பு. பெரும்பாலான கவிதைகள் கடந்த இரண்டு ஆண்டுகளில், திங்கள் இதழ்களில், சிறப்பு மலர்களில் வெளியானவை.

எனது கவிதைகட்குக் கருவாய் அமைபவை, சமுதாயப், பொருளாதாரப் பிரச்சினைகள்; தமிழ் மொழி; தமிழ் இனம் பற்றிய சிந்தனைகள் - கவலைகள் என்றாலும் பொருந்தும். இவற்றுடன் வைய வாழ்க்கை பற்றிய சில எண்ணங்களும் இடம் பெற்றுள்ளன. ஏறத்தாழ 40 ஆண்டுகட்கு முன் (1955):

> செயலில், சிந்தையில், செலுத்தும் ஆட்சியின்
> இயலில், தேர்தலில் எங்கும் சாதியே
> உயர்வு கொண்டதே .....
>
> ..... .....
>
> கற்றவர் தம்குலம் காக்க முந்துவர்
> மற்றவர் எவ்வழி மனம் திருந்துவர்
> புற்று நோயிதைப் போர்த்து வைப்பதோ
> .....*

என எழுதினேன்: பின்னர், இன்றிலிருந்து சுமார் பத்து ஆண்டுகட்கு முன் (1990) தமிழர்கட்கு இன்று:**

---

★ குலோத்துங்கன் கவிதைகள் : தொகுப்பு வெளியீடு, 1970; பக்.75

★★ குலோத்துங்கன் : கதவுகள் காப்பதில்லை.., பாரதிபதிப்பகம், 1990; பக். 96

இந்தியத் தலைமை இல்லை
இனிவரும் தலை முறைக்குச்
செந்தமிழ்த் தலைவர் என்னும்
திறமுளர்வருதற் கில்லை

சாதியின் தலைவர் என்னும்
தவளைகள் எழுப்பும் சத்தம்
காதினைப் பிளக்கும் தோற்றம்
காண்கிறேன்: மழை பிறக்கும்

வாரியாய் நின்ற பூமி
வறளுமோ .....

என்ற அச்சத்தைத் தெரிவித்திருந்தேன். அன்று அஞ்சத்தக்க எதிர்காலச் சாத்தியக் கூறாகத் 'தோற்றம்' அளித்த ஒன்று, இன்று நடைமுறை ஆகிவிட்டது. தமிழகத்தில் சாதித் தலைவர்கள் அரசியலில் கணிசமாக ஆதிக்கம் செலுத்தும் அளவிற்கு வளர்ந்து விட்டார்கள். மாநில அரசிலிருந்து, மைய அரசு வரை, சாதி உணர்வின் தாக்கமும், சாதித் தலைவர்களின் ஆதிக்கமும் புறக்கணிக்க இயலாத அளவிற்கு மட்டுமன்றி, பேரம் பேசி ஆதரவு பெற வேண்டிய அளவிற்கு வளர்ந்து விட்டன, உயர்ந்து விட்டன. அவை தொடர்ந்து வளர்கின்றன, உயர்கின்றன. சாதி உணர்வு வளர, வளரத் தமிழின உணர்வு தொடர்ந்து மங்கி, மறைந்து வருகிறது. நமது அரசியல் தலைவர்கள், 'சாதி உணர்வைப்' பொருத்தவரை "வீடோர் உலகம்: மேடை ஓர் உலகம்," என இரட்டை வாழ்க்கை நடத்தி வந்திருக்கின்றனர். எழுத்திலும் பேச்சிலும் எவ்வளவு கடுமையாகத் தாக்கினாலும், திரைமறைவில் சாதித் தலைவர்களின் ஆதரவை, அதைவிட முக்கியமாகச் சாதி உணர்வை, நம்பி அவற்றிற்குச் சாதகமான நடை முறையை மேற்கொண்டே அரசியல் நடத்தி வந்திருக்கின்றனர். உண்மையாகவே சாதிப் பற்று, சாதி உணர்வு நீங்கிய அரசியல் தலைவர்களை விரல் விட்டு எண்ணி விடலாம். அவர்கள் சற்று

அரிதானவர்கள். **'சாதியின் பெயரில் சங்கம் அமைத்தால் சலுகைகள் பெறலாம்'** என்பது இன்றைய வேதவாக்கு. சமுதாய நீதிக்கு என இரைத்த நீரில், சாதிக்களையும் தழைத்து வளர்கிறது. இந்த நிலை பற்றிய கவலைகள், இந்தப் போக்கின் எதிர்கால விளைவுகள் பற்றிய அச்சங்கள் கவிதை வடிவம் பெற்றிருக்கின்றன.

இன்று மனிதராலும், கடவுளாலும் கைவிடப்பட்ட மக்கள் ஈழத்தவர். இன்றைய உலகின் மொழிக் குடும்பத்தினர் பலர், காட்டு மிராண்டிகளாகவும், நாடோடிகளாகவும் வாழ்ந்த காலத்தில், நாகரிக உயர்வும், பண்பும், நாடு என்னும் உடைமையும் பெற்று வாழ்ந்த ஒரு பண்டை இனம், இன்று அகதிகளாய், ஆதரவற்றவர்களாய், நிலத்திடை தீய்ந்தும், நீரிடை மூழ்கியும், நிலங் கண்ட பக்கமெலாம் கால் வைத்துக் கரையேறியும், புரவலர் சிலர், புறக்கணிப்பவர் பலர் என்ற நிலையில் துரத்தப்படும் வேட்டை உயிர் போன்று வாழ்க்கை நடத்துகின்றனர். தாயகம் நீங்கித் தரையெலாம் நலிந்த யூதர் வரலாறு, இரண்டாயிரம் ஆண்டுகட்குப் பின்னர் மீண்டும் ஆசியாவில் இன்னொரு பகுதியில் இன்னொரு வகையில் அரங்கேறுகிறதோ என்ற ஐயம் எழுகிறது.

இன்றைய சுற்றுச் சூழல் வாதிகள், மனித உரிமை இயக்கத்தினர் ஆகியோர், எங்கோ, என்றோ நிகழக் கூடிய தீமை பற்றி, இன்றே துயிலிழந்தவர்களாக, எச்சரிக்கை விடுக்கின்றனர். மதத்தின் பெயரால், இனத்தின் பெயரால், மொழியின் பெயரால், மனித உயிரைத் துரும்பெனத், தூசெனக் கூட மதியாது கொன்று குவிக்கும் பயங்கரவாதிகளின் சார்பில் கூட மனித உரிமை பற்றி வாதிடும் மனித நேயப் பெருமக்கள், இன்று பல பெயர்களில், பல நாடுகளில் வலம் வருகின்றனர். ஆனால் ஒரு சுதந்திர நாட்டின் குடிமக்கள், வீடிழந்து, விலங்குகளோடு விலங்குகள் எனக் காடுகளில் அலைந்து, பின்னர் நாடிழந்து, கடலில் மிதந்து, பிழைத்த உயிரினர் கண்ணுக்குப் பட்ட மண்ணிலெல்லாம் புகலிடம் தேடி

அகதிகளாக அல்லல் படுவதை ஏனோ இந்த 'மனித உரிமைகள்' காண மறுக்கின்றன: கண்டாலும் காணாததுபோல் நடக்கின்றன. உலக அளவில், பலநாட்டின் தலைவர்கள் இந்தப் பிரச்சினையில் அணிந்திருக்கும் போலி வேடத்திற்கு வரலாற்றில் வேறு உதாரணத்தைக் காட்ட முடியாது. பெரும்பான்மை வலிமையை நம்பி, மனித இனம் புனிதம் என்று கருதும் அடிப்படை உரிமைகளைக்கூடச் சிறபான்மையினருக்கு ஆரம்பத்தில் மறுத்த ஆட்சியர் ஒரு புறம்; தங்கள் உரிமைக்காக வாதாடிப் பின்னர் ஆயுதம் தாங்கிய புரட்சி வாதிகளாகி, உலகத்தின் பார்வையில் இன்று பயங்கரவாதிகளாகி விட்ட போராளிகள் ஒரு புறம் - இவர்கள் இருவருடைய பகைமைத் தீயில் வெந்து கருகும் எண்ணற்ற மக்களை உலகமே கைவிட்டு விட்ட கொடுமை ஒரு புறம்; இவை பற்றிய சிந்தனைகள் கவிதை வடிவம் பெற்றிருக்கின்றன.

மொழி உணர்வு கொடி கட்டி ஆட்சி செய்வது போன்று தோற்றமளிக்கும் மாநிலம் தமிழ்நாடு. தமிழ் மொழி இங்கு அரசியல் கட்சியினருக்கு ஆயுதம்: தனிப்பட்ட சிலருக்குப் பிழைப்பு: இன்னும் சிலருக்கு விளம்பரச் சாதனம் சிலருக்குப் பொழுது போக்கு: உண்மையிலேயே அதன் மேம்பாடு பற்றி, பயன்பாடு பற்றி, வளர்ச்சி பற்றிக் கவலைப் படுபவர்கள் சிலர்தம் எதிர்காலத் தேவை பற்றிய எண்ணங்களும் கவிதைகளில் இடம் பெற்றிருக்கின்றன.

முன்னேறிய நாடானாலும், பின் தங்கிய நாடானாலும், முற்பட்ட வகுப்பாயினும், பிற்பட்ட வகுப்பாயினும், நாடு, இனம், மொழி, மதம் என்ற பேதங்கட்கு அப்பாற் பட்டு ஊனத்தை (Handicap) அனுபவிப்பவர்கள் பெண்கள் தான். மனிதன் சந்திரனில் கால்வைக்கவும், வியாழனில் தனது விண் கலத்தை இறக்கவும் இயன்றவனாக முன்னேறிய போதிலும், தன்னை யொத்த இன்னொரு உயிருக்குக் சம உரிமை கொடுக்கும் நிலைமைக்கு ஆண் பரிணாம வளர்ச்சி பெறவில்லை. பெண்ணிய இயக்கத்தினர்

ஒவ்வொரு பெண்ணுக்கும் ஆணுடை தரித்து, ஆண்கள் செய்யும் வேலை எல்லாம் செய்ய வைப்பதுதான் பெண்ணுரிமை என்ற அடிப்படையில் செயல்பட்டு வருகிறார்கள். பெண் தனித்தன்மை வாய்ந்தவள். அவள் ஆணின் நகல் அல்லள். பெண்கள்,

**வீட்டில் பயிர் வளர்த்து வேளாண்மை கண்டவர்கள்**
**காட்டில் விலங்கெறிதல் கடந்த ஒரு நாகரிகம்**
**கூட்டுவித்த மேழியுகம் கொண்டு தந்த மேதையர்கள்**
**ஊட்டுவிக்கும் தாய்மையினர்: உலகம் புரப்பவர்கள்**
**ஆணின் உயர்ந்தவர்கள் * ....**

என நம்புபவன் நான். பெண்கள் மானிடர் தொகையில் மட்டும் பாதி அல்லர். மனிதத்திலும் ஒரு பாதியினர். தனிப்பட்ட பண்புகள், தனிப்பட்ட பணிகளைக் கொண்ட பாதியினர். பெண் தனது சமத்துவத்தை நிலை நாட்டப் பேருந்தும், விமானமும் ஓட்டத் தேவையில்லை. ஓட்டுவதிலும் தவறில்லை. அது ஒன்றும் பெரிய சாதனை அன்று.

**எட்டும் அறிவினில் ஆணுக் கிங்கே பெண்**
**இளைப் பில்லை காண் என்று கும்மியடி**

என்ற இரு வரிகளில் சமத்துவத்தின் ஆத்மா எங்கிருக்கிறது என்பதை பாரதி கூறிச் சென்றார். பெண் எனும் படைப்பின் ஒரு பாதியும் சேர்ந்தால் தான் மனிதம் பூரணமடைகிறது. இந்தக் கருத்தும் கவிதை வடிவம் பெற்றிருக்கிறது.

மனிதப்படைப்பு ஒரு புதிர்: எண்களுக்கு மிஞ்சிய கோள்களும், எண்ணத்தை மிஞ்சிய தாரகைகளும் கொண்ட அண்டம் ஒரு பெரும் புதிர். மனிதன் எல்லையற்று விரியும் அண்டத்தையும் ஆய்கிறான்: எல்லையற்றுச் சுருங்கும் அணுவின் பகுப்பையும் ஆய்கிறான். அவன் கண்டவை மகத்தானவை எனினும், ஒளவையார் அன்று கூறியதாக வரும் கவிதை வரிகளை

---

★ குலோத்துங்கன் : வாயில் திறக்கட்டும்; பாரதீபதிப்பகம், 1983, பக்.128.

ஒப்ப. இருவரை 'கண்டது கைம் மண்ணளவு: காணாதது உலகளவு' என்ற தத்துவமே நிலைத்து நிற்கிறது.

உலக உயிர்கள் அனைத்தினும் மனிதன் மட்டுமே கருவிகளைப் படைக்கும் திறன் வாய்ந்தவன். கலப்பையிலிருந்து தொடங்கிக் கணிப்பொறி வரை அவன் கண்ட கருவிகள் மகத்தானவை. அவற்றின் துணை கொண்டு அவன் நடந்த பாதை நெடியது. ஏறிய மலைகள் உயர்ந்தவை. அடைந்த வெற்றிகள் வியக்கத்தக்கவை. எனினும் கருவிகள் மனித வாழ்வின் பல பரிமாணங்களை அளக்கும் திறனற்றவை. அஃகி, ஆழ்ந்த உள்ளம் மனித ஆற்றலின் கர்ப்பப்பீடம். அது கருவிகட்கு அப்பாற்பட்டது. கட்புலனைக் கடந்தது. கைகட்கு எட்டாதது. நாளை என்பதைக் கருவிகள் காண இயலாது. இந்தச் சூழ்நிலையில் நிராயுத பாணியாக நிற்கும் மனிதனுக்கு அளவுகோல் கருவியும் 'மனம்' தான். வழிகாட்டும் அணையா விளக்கும் 'மனம்'தான். மானிட முயற்சி பற்றிய சில சிந்தனைகள் இடம் பெற்றுள்ளன.

இந்நூலில் இடம் பெற்றிருப்பவற்றில் பெரும்பாலான கவிதைகள் 'அமுத சுரபி' இதழில், வெளிவந்தவை. தினமணி பொங்கல் மலர், கலைமகள் தீபாவளி மலர், இலக்கியப் பீடம், தாமரை, ஓம் சக்தி தீபாவளி மலர், கதிரவன் பொங்கல் மலர், ஜீவா முழக்கம், விடுதலைப் பொன் விழா மலர், 'தமிழ் நானூறு' கவிதைத் தொகுப்பு, உலகப் பொதுமறை வள்ளுவம், கவிதைத் தொகுப்பு போன்றவற்றில் வெளிவந்தவை சில கவிதைகள். இந்த இதழ்களின் ஆசிரியர்கட்கு நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறேன். கணிப் பொறியில் தட்டச்சுச் செய்த திரு.ராஜேந்திரன் அவர்கட்கு நன்றி தெரிவிப்பதும் முறையாகும்.

எனது நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வரும் பாரதி பதிப்பகத்தார்க்கு நன்றியுடையேன்.

*சென்னை*
செப்டம்பர் 98

வா.செ.குழந்தைசாமி

## பதிப்புரை

கவிஞர் குலோத்துங்கன் உலகறிந்த அறிவியலறிஞர்; மிகச் சிறந்த தமிழ்க் கவிஞர்; பாரதிதாசன் பரம்பரைக் கவிஞருள் முன் வரிசையில் திகழ்பவர்.

கவிஞர்கள் பாடு பொருள் எதுவாயினும், அதில் அவரவர்க்கென அமைந்த ஒரு தனிக் கருத்து மேலோங்கி நின்று அதனால் பெருமை பெறுவதுண்டு. பாடிய பொருள் பலவாயினும் பாரதியார் 'தேசியக் கவிஞர்' என்னும் சிறப்பைப் பெறுகிறார்; பாரதிதாசன், 'சமுதாயச் சீர்சிருத்தக் கவிஞர்' என இனம் காணப் பெறுகிறார். அவ்வகையில் கவிஞர் குலோத்துங்கன், 'அறிவியல் கவிஞர்' எனச் சுட்டும் பெருமையைப் பெற்றுள்ளார்.

பாவேந்தர் பாரதிதாசன்,

**எங்கள்தமிழ் உயர்வென்று நாம் சொல்லிச் சொல்லித்**
**தலைமுறைகள் பலகழித்தோம் குறைகளைந்தோ மில்லை;**
**தகத்தகாயத் தமிழைத் தாபிப்போம் வாரீர்**

எனப் பாடினார். பாவேந்தர் நினைத்த குறைகளைக் களைந்து, இன்று, 'தகத்தகாயத் தமிழைத் தாபிப்பவராக' கவிஞர் குலோத்துங்கன் திகழ்ந்து வருகிறார்.

**இனிய தமிழ் 'புதுப்பிறவி' எடுக்க வேண்டும்**
**எதிர்காலத் தேவையெலாம் ஏற்க வேண்டும்**

என அவர் விழைகிறார். இக்காலம்,

ஆய்வியலும் அறிவியலும் வளருங் காலம்

ஆதலின் அத்துறைகளில் தரமான கல்வி வளம் தமிழ்மொழி வழி பெற வேண்டும் என வலியுறுத்துகிறார்.

**இதுவரை கண்டதன் பெருமை பேசியே காலம் கழிக்காதீர்**
**எங்கள் தேடலுக்கு எத்தனையோ உலகங்கள்**
**காத்திருக்கின்றன**

என, காண வேண்டியவற்றின் மிகுதியைக் காணத் தூண்டுகிறார்.

'பலதுறைக் கலைகளின் நுட்பங்களைக் கூறும் புத்தம் புதிய கலைகள் தமிழில் தோன்ற வேண்டும்; அவற்றைச் சொல்லும் திறமை தமிழில் மலர வேண்டும் எனும் உள்ளக் கிடக்கையை 'அங்கிங்கெனாதபடி' நம் கவிஞர் 'எங்கும்' சொல்லி வருவதைக் காண்கிறோம்'

புதுமை வேண்டும் என்பதால் பழமையை முற்றிலும் மறந்துவிட வேண்டும் என்பதன்று கருத்து; பழமையாயினும் என்றும் புதுமையாகத் தோற்றிடும் தமிழ்ச் சிந்தனைகளை நாம் மறந்து விடக் கூடாது என்பதிலும் கவிஞர் கவனமாக இருக்கிறார். திருக்குறள் வழிகாட்டுதலை மாந்த இனம் மறந்துவிட முடியுமா? ஏற்க வேண்டிய பழமையை என்றும் போற்றி மேற்கொள்ளத்தான் வேண்டும்

**இனமெனும் பேதம்; மற்றும் இடமெனும் பேதம்; மாறும்**
**தினமெனும் பேதம்; யாவும் தீர்த்தொரு பொதுமை கண்டு**
**வாழ்வியல் படைத்த மேதை, வள்ளுவன் தந்த முப்பால்**
**சூழ்நிலை அனைத்தும் தன்னுள் சூழ்ந்தொரு பாதை**
**காட்டும்**

'வள்ளுவர் வழி' இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாயினும் இன்றும் 'புதிய வழியே'

மாந்த வாழ்க்கையிலிருந்து கவிதை விலகிச் செல்ல முடியாது. கொடுமைகளைக் காணும்போது தன்னுள் ஏற்படும்

கொந்தளிப்புகளைக் கவிஞன் வெளியிடப் பின்வாங்குவதில்லை. வரலாற்றில் நிலைபெற்று விட்ட தீமைகளைக் குலோத்துங்கன் வெடிபடச் சாடுகிறார். அதனாற்றான், நச்சு வேர் விட்டு, கொடுமை முட்களைப் பரப்பி நிற்கும் சாதிக் கொடியை வேரடி மண்ணோடு கல்லி எறியத் துடிக்கிறார். சாதி ஒழிய வேண்டும் என முழங்கினால் போதாது; மன்றத்திலே சாதிக்கு எதிராக முழங்குபவர்கள், மறைவாகத் தம் நலம் கருதி, அதனோடு கொஞ்சிக் குலவும் நிலை இன்றும் இருக்கிறதே! இது நியாயமா? அறிவுடைமையா? பொருந்திய செயலா? எனப் பொங்கிக் கேட்கிறார்.

**ஒரு 'துணை' விட்டு ஒரு துணையை ஒண்டி வாழும்**
**கொடிய 'உண்ணி' சாதி. அச்சாதி என்னும்**
**பழியறியாச் சமுதாயம் படைத்து வாழ்வோம்**

என அனைவரையும் ஆர்வத்துடன் அழைக்கிறார்.

மாந்தம் காயப்பட்டுக் குருதி கொப்புளிக்கும் வேளைகளில் நம் கவிஞர் தன் கவிதைகளைக் 'கட்டு துணி'யாக்க முந்துகிறார். ஈழத் தமிழன் படும் சொல்லொணாக் கொடுமை கண்டு குலோத்துங்கன் உள்ளத்தில் சோகமும் சினமும் பீறிட்டுப் பொங்குகின்றன. உரிமை வேட்கை 'ஞாயிற்றினும் வெய்யது; யாவும் தீய்க்கும்' என்பது வரலாற்றின் தீர்ப்பு.

**இமைவிற்றுக் கருமணியைக் காப்பதுண்டோ?**

**மலர்மது வுண்ணும் வண்டு**
**மலர் இதழ் அமர்தல் போல**
**நிலமகள் நோதல் இன்றி**
**நிறைபயன் நேர்தல் தேவை**

இவ்வாறான கவிதை நயங்கள் நூல் முழுதும் பளிச்சிடுகின்றன.

எளிய தமிழ், இனிய நடை, தெளிந்த கருத்து - இவை குலோத்துங்கன் கவிதைகளின் தனிச்சிறப்பு. அதனாற்றான் புதுமை எனும் பெயரால் எதுவுமே புரியாவண்ணம் குழப்பி

எழுதுபவர்களை அவர் கண்டிக்கத் தவறுவதில்லை. புதுமையைப் போற்றுவோம் - அது புரியும்படியானதாக இருந்தால்! அவ்வாறின்றி வந்ததை எழுதும் விந்தைப் படைப்பாளர்களை நோக்கி,

**விளங்காத நும்படைப்பு யாருக்காக?**

என வேகமாகவே வினவுகிறார்.

தூய்மையில்லா அரசியல் கட்சியாளர்களையும் கவிஞர் விட்டு வைக்கவில்லை. அவர்கள் கொள்கை, துளியேனும் இல்லாது தோற்பொம்மை ஆட்டமல்லவா ஆடுகின்றனர்! நீதிக்காக ஆவிலைத் துறந்த மன்னன் வாழ்ந்த மண்ணில்,

**மானமொன் றணுவு மின்றி**
**மலத்தினும் அரிசி தேடும்**
**ஈனர்கள் பிறந்த தென்னே?**

என மனம் கலங்குகிறார்.

கருத்துப் பேழையாம் கவிஞர் குலோத்துங்கனின் இந்நூலை வெளியிடுவதில் பாரதி பதிப்பகம் பெருமை கொள்கிறது.

அறிவியல், சமூகவியல், பண்பாட்டியல், கல்வி இயல், மாந்தநேய இயல் எனும் திரிகளை இட்டு, தன் புலமை நெய் வார்த்து, சொற்சுடர் ஏற்றி, 'அணையாத தீபம்' ஒன்றைக் கவிஞர் குலோத்துங்கன் நமக்கு அளித்திருக்கிறார்.

கவிஞருடைய வெளிச்ச விழுதுகளைத் தாங்கும் அகலாக என்றும் எம் பதிப்பகம் இருந்து வரும் என்னும் அன்புணர்வோடு, 'அணையாத் தீபத்தின்' ஒளியைப் படர விடுகிறோம்!

அன்புடன்,

பாரதி பதிப்பகத்தினர்.

# இதனுள்

## அணையாத் தீபம்

என்னருந் தாய்நிலம் இருநூ றாண்டுகள்
அன்னியர் ஆட்சியில் அடிமையென் றிருந்த

களங்கம் முழுமையும் களைந்த திருநாள்.
விலங்குகள் அறுந்து வீழ்ந்த பொன்தினம்

வன்மையொன் றறியா வழியின் வலிமையை
மன்புதை கண்ட நாள்: மானிட சாதியின்

சரிதையில் அகிம்சைத் தத்துவம் என்பதாம்
அரியதோர் ஆயுதம் அவனி பெற்றநாள்

★ ★ ★

புனிதம் என்று நாம் புகலும் பண்(பு) ஒரு
மனிதனாய் வந்து, மண்ணிடை நடந்து,

அறத்தின் வலிமையை, அன்புடை நெஞ்சின்
திறத்தினைச், சத்தியச் செம்மையின் ஆற்றலை,

நடைமுறைப் போரினில் நாட்டி யோன் ஆயுதப்
படையெது மின்றியும் படைகளை வென்றிடும்
கலையினை மாந்தர்தம் கையில் தந்தவன்
தலைமையின் பெருமையைத் தரணி கண்ட நாள்.

★ ★ ★

இமயம் தொடங்கி, இருதிசை கூடும்
குமரியின் முனைவரை குவிந்த இந்தியர்

ஒன்றிய நெஞ்சின் உறுதியின் விளைந்த
வென்றியின் பொன்விழா: விடுதலைப் போரில்

மண்ணிடைத் தேவராய், மாண்பின் வடிவமாய்
எண்ணறு மக்களின் இதய தெய்வமாய்

வயங்கிய தலைவர்கள், வாழ்வே தியாகமாய்
இயங்கியும், கொடுமைகட்(கு) இரையாய் நலிந்தும்,

சிறைகளில் வாடியும், செக்கிழுத் துழன்றும்,
கரைகடந் தயலவர் காவல் சிறைகளில்

தனிமையில் வாடியும், தவம்மேற் கொண்ட
முனிவர் போல் தேவைகள் முற்றும் துறந்தும்,

சுற்றமும் நட்பும் துணையும் பிரிந்தும்
பெற்ற நல்வரம்: பேற்றின் பொன்விழா.

★ ★ ★

குருதியில் நனைந்த கொடியினை மூச்சின்
இறுதியும் கைகளில் ஏந்திய தியாகத்

தீயிடை ஏற்றிய தீபம் சுடர்விடும்
கோயில் பொன்விழா: கூட்டம் கூட்டமாய்
அணிவகுத் தெழுந்தும், ஆவியும் துரும்பெனத்
துணிவுடன் நடந்தும், சுட்டு வீழ்த்திய

கொடுமையில் மடிந்தும், கும்பல் கும்பலாய்
தடியடி பட்டும், தரையிடை வீழ்ந்து

காவலர் ஆயிரம் கால்மிதி பட்டும்,
சாவதும் வாழ்வதும் தாயக மாண்பைக்

காப்பதற் கல்லால் கடமை மற் றிலை யெனும்
தீர்ப்புடன் தூக்கில் சிறையிடை மடிந்தும்,

கற்பனை வளத்தில் கனிந்த நெஞ்சமும்
சொற்களில் வடித்துச் சொல்லுதற் கியலாச்

சித்திர வதையிடை தேயினும், நெஞ்சிடை
புத்துணர் வூறிப் பொங்கும் ஆர்வமோ(டு)

அலைமேல் அலையென ஆர்த்தெழத், தம்முன்
மலையே நகர்ந்து வருவ தாயினும்

எதிர்கொளும் வைரமும், இதயம் கலங்கா
முதிர்வும், தளரா முனைப்பும் தாங்கிய

தொண்டர் கோடியும் தொடர்ந்து நலிந்து
கண்ட நல்வரம் காணும் பொன்விழா.

★ ★ ★

பொன்விழா இன்று காணும்
புனிதநாள் அன்று காண

என்புடன் தசையும் நாரும்
ஈந்தவர் நெஞ்சம் கண்ட

கனவுகள் பற்றி எண்ணும்
கற்பனைத் துயிலில் ஆழ்ந்தேன்.

வறுமையின் கொடுமை தீர்ந்து
வளம்பல பெருக, வையம்
பெறுவன அனைத்தும் பெற்றுப்
பிறங்கு நாள் தோன்று கின்ற

காட்சியை நினைந்தி ருப்பர்.
கலைகளில் சிறந்த பண்டை
மாட்சியை விஞ்சு கின்ற
வாய்ப்பினை நினைந்தி ருப்பர்.

வழிவழி வந்த சாதி,
மற்றுள மாசு, சூழ்ந்த
பழியெலாம் துடைத்து யர்ந்த
பாரதம் படைக்கும் நாளை

எண்ணியும் மகிழ்ந்தி ருப்பார்.
இலக்கணம், இலக்கி யங்கள்
பண்ணுயர் இசையும் கூத்தும்
பல்வகைக் கலையும் கண்ட

மரபுடைப் பண்டை நாடு,
மானிடர் தேவ ரென்னும்
தரமுடை வாழ்வு காணும்
தத்துவம் தரணி காணும்

பாதையை வகுத்து வையம்
பயனுறு வாழ்வு காணும்
மேதையின் ஊற்றாய் நிற்கும்
மேன்மையை விழைந்தி ருப்பர்

★ ★ ★

வன்முறை, வஞ்சம், தாழ்ந்த
மனநிலை, நிறைந்த பாரில்,
உண்மையின் வழியில் நின்ற
உத்தமர் பலரைத் தந்த

புண்ணிய பூமி, நல்லோர்
போற்றிய தேயம்: வாழ்வில்
நுண்ணிய ஆழ்ந்து காணும்
நுழைபுலன் மேதை மின்னும்

வல்லுநர் காலந் தோறும்
வழி வழி வந்த பண்ணை;
தெள்ளியர் அரசு செய்த
சிறப்புடைப் புனித பூமி.

அடிமையென் றிருந்த நாட்கள்
அகன்றிடச் சிலிர்த் தெழுந்து
படிமிசை தலைமை யேற்றுப்
பண்புகட் குயர்வு தேடும்

வாய்ப்பினைப் பெற்ற தென்று
மனமகிழ்ந் திருப்பர்: பெற்ற
தாய்த்திரு நாட்டின் வாழ்வே
தவமெனக் கொண்ட சான்றோர்

★ ★ ★

சுதந்திரப் போரில் நின்ற
தூய்மையர், இந்த வையம்
விதந்திடும் வண்ணம் நாடு
மேநிலை அடையும் பாதை

வகுத்தனர்: வகுத்த பாதை
வழிநடந் துயர்ந்த யாவும்
தொகுத்தனர்: மற்றை நாட்டார்
சுதந்திரம் தேடும் போரில்

உதவினர். தம்மை ஆளும்
உரிமைஓர் புனிதம் என்னும்
பதமுடைத் தத்துவம் நம்
பண்பெனும் மரபு கண்டார்

★ ★ ★

காலமும் மறைய, நாட்டில்
கட்சிகள் வளர, ஆள்வோர்
சீலமும் மாறக் கண்டோம்.
சிறுமையர் மெல்ல, மெல்லத்

தலைவர்என் றுயர்ந்தார்: நாளும்
தன்னலம் வளர்த்தார்: தங்கள்
வலையினில் மக்கள் வீழும்
வழிபல வகுத்தார்: எங்கோ

தாரகை ஒளிர்தல் போலும்,
தழுவிடும் இருளில் மின்னல்
கீறல்கள் தோன்றல் போலும்,
கேண்மையர், கருமம் பேணும்

தரத்தினர் பன்மு கத்தும்
தாய்நிலம் வளரச் செய்யும்
திறத்தினர், பதவி யேற்றுச்
செயல்படக் காண்ப மேனும்,

அல்லவர் ஆட்சி ஏற்க,
அவலங்கள் பெருக, நாளும்
நல்லவர் ஒதுங்கி நிற்க,
நாடெலாம் ஊழல் பொங்கும்

கோரத்தைக் கண்டு நெஞ்சம்
குமுறினோம்: நேர்மை யற்றோர்
பாரத்தைக், கயவர், செய்யும்
பாவத்தைத் தம் ஊன் பேண,

உலகையும் விற்பார் தங்கள்
ஊழலைச், சமுதா யத்தில்
பலவகைப் பிரிவு கண்டு,
பகைமையை வளர்த்துத் தங்கள்

தலைமையைக் காப்போர் செய்யும்
சதியினை, அமைப்பு யாவும்
குலைவதைத் தங்கள் வாழ்வே
குறியெனும் கயமை தன்னைத்

தாங்குமோ இந்த நாடு?
தன்னலத் தீயர் வன்மை
நீங்குமோ? எமது மக்கள்
நீதியின் வழியில் செல்லும்

சீலமும் திறனும் நேர்மைச்
செல்வமும் மக்கள் தம்பால்
சாலவும் அன்பு கொண்ட
தகுதியும் வாய்ந்தோர் ஆட்சி

தேர்வரோ? பாரதத்தின்
சென்றநாள் சரிதை எண்ணும்
பார்வையர், பரந்த உள்ளப்
பண்பினர், சமயம் சாதி,

கடந்தவர், கடமை யொன்றே
கடவுளர் பணியென் றெண்ணும்
திடமுளர்; தியாக நெஞ்சர்;
திருவினை வளர்க்கும் ஆற்றல்

பொருந்திய திறனர்: வாழ்வில்
புதியன புகுதல் ஏற்றுத்
திருந்திடும் திறந்த உள்ளச்
செம்மையர்; சமத்து வத்தின்

அடிப்படை தெளிந்த ஆட்சி
அமைத்திடும் திறனர்; நாளை
படிப்படி யாக வென்று
பதவியில் அமரச் செய்து

பெறத்தகும் பெருமை யாவும்
பெற்றிடச் சபதம் ஏற்றுப்
புறப்படும் புனித நாள் இப்
பொன் விழாத் திருவிழாநாள்.

**- ஜீவா முழக்கம் :**
**விடுதலைப் பொன் விழா மலர், ஆகஸ்ட் 1997**

## தனிமை

எங்கு நோக்கினும் மாந்தர்: மேல் விழும்
எள்ளும் மோதி எதிர்ந்திடும்.
அங்கு நின்றனன் எனினும் என்னுடன்
அருகில் நின்றது 'தனிமை' யே.

சூழ நின்றது உறவு: மாபெருந்
துணைகள் நின்றன: ஆயினும்
ஆழ மாகஎன் உள்ளம் தோயநான்
அனுப விப்பது 'தனிமை' யே.

பொங்கு தேர்விழா; நடனம், நாடகம்
பொற்பின் தெய்விகப் புன்னகை:
அங்கு கூடினன்: பாடி ஆடினன்
அணைய நிற்பது 'தனிமை' யே.

பசுமை போர்த்திய பழனம்: அங்கொரு
பாலை தோன்றுதென் பார்வையில்
விசுவ தேவரென் முன்னர் நிற்பினும்
வெறுமை தோன்றுதென் விழிகளில்.

அடைய நின்றன, தாண்டி அங்கொரு
ஆசை தோன்றுதென் நெஞ்சினில்
உடைய யாவினும் உயர நின்றிடும்
'உடைமை' காண்இடம் 'தனிமை' யோ?

கலைமகள், தீபாவளிமலர்:1996.

## ஏக்கம்

நீநினைப்ப தில்லைஎனை: நேற்றுவரை உன்னுளத்தில்
யானிருந்த பீடத்தில் யாரிருக்கத் தக்கவர்:நீ,

'உன்னைப் பிரிந்தால்இவ் வுலகே வெறுமை'யென
முன்னைப் பலதடவை மொழிந்ததுவும் பொய்யோ? நாம்

பாசமெனும் பாற்கடலில் படகோட்டிப் பண்ணிசைத்த
நேசம் முறிந்ததுவும் நிசந்தானோ? என்னுடலின்

அணுவனைத்தும் நிற்பவள்நீ: அணுவைப் பகுத்தெடுப்பின்
நுணுகியுள மூலத்தும் நுழைந்துள்ள தேவதைநீ!

நீரில் கலந்தபொருள் நெருப்பால் பிரித்திடலாம்
நாரில் தொடுத்தமலர் நகம்கொண் டவிழ்த்திடலாம்

இளங்கதிரின் வெண்மையிடை இணைந்துள்ள பல்நிறங்கள்
விளங்கப் பிரித்திடலாம்: விஞ்சைஇலை, விஞ்ஞானம்.

காலைப் பனித்துளியின் களங்கமிலாப் பேரழகைச்,
சோலைப் புதுமலரின் சுடர்எழிலை, வையகத்தில்

காவியத்தின் காந்தத்தைக் கலைஞர் விரல்படைத்த
ஓவியத்தின் ஈர்ப்புகளை, உயர்கலையின் விந்தைகளைப்

பிரித்தெடுத்தல் என்றுமிலை: பேர்த்தெடுத்தல் கூடும்: அது
சரித்திரத்தை மாசுசெயும்: தாரணியில் நம்பிணைப்பு

ஈருயிரின் வேதியியல் இணைப்பென் றிருந்ததெலாம்
ஒருயிரின் கற்பனையோ?, உலகம்என நாமழைக்கும்

விந்தை இடமிதனில் விளைகின்ற நட்பனைத்தும்
சந்தை உறவுகளோ? தனிஇருவர் நம்காதல்

புனித உணர்வுகளின் பூரணம்என் றெண்ணியதும்
இனிய கனவுகளோ? எனைவிடுத்து நீமகிழும்.

காலத்தை ஓர்கணமும் கற்பனையான் செய்ததிலை:
ஞாலத்தில் ஓர்கோடி நட்புவகை உண்டென்ப(து)

எளியன் அறியேன்:என் இதயத்தை ஆற்றுகிற
வழியொன் றறியேன்: பின் வழிதேடி யான்நடக்கும்

பாதையெலாம் நீயிருக்கும் பக்கத்தே சேர்க்கிறது.
கோதையுனை யன்றிஒரு கொழுகொம் பறியாது

வாழ்வோன்யான்: உன்பால் மனமிழந்த பக்தியிலே
ஆழ்வார்கள், நாயன்மார், யாவரையும் விஞ்சியஎன்

பார்வையிலே ஓர்கோடி பாடலைநீ காண்கிலையோ?
ஆர்வம் பெருக்கெடுக்க, அன்பு கரைபுரள,

நிரம்பி வழிகின்ற நெஞ்சத்தைச் சித்தரிக்க
வரம்புடைய மானிடத்தின் வார்த்தைகளால் மாளாது.

கலையுருவாய் நிற்கும்நீ கற்பனையில் என்னுணர்வின்
நிலையுணர்தல் கூடும்: எந்தன் நெஞ்சுணர்தல் கூடும்: நல்

அன்பிற் கிலக்கணமாய், அகத்திற்கு நாயகமாய்
மன்பதையின் வாழ்விலொரு மறுமலர்ச்சி காண்போமோ!

தினமணி, பொங்கல்மலர், 1996.

## சோகம்

சோகம் ஏன்எனைத் தொடர்கிறது - வழித்
துணைபோல் என்னொடு வருகிறது,
தாகம் தீர்ந்துளம் மகிழ்கின்றேன் - சிறு
சஞ்சலம் அங்கும் தவழ்கிறது.

வெற்றியின் அலைகளில் மிதந்தாலும் – விரி
விண்ணொடும் மீனொடும் கலந்தாலும்
முற்றும் மலர்ந்த காட்டினிலே – சிறு
முள்ளெனச் சோகம் முகிழ்க்கிறது.

மழலையர் துணைவியர் மகிழ்கின்றார் - அவர்
மடியிலும் தோளிலும் சாய்கின்றார்.
கழனியின் கதிர்வள நிறைவிடையே - சிறு
களைபோல் சோகம் கலக்கிறது.

நெஞ்சம் இழந்ததை நினைக்கிறதோ - அதன்
நிழலெனச் சோகம் தொடர்கிறதோ?
கொஞ்சமும் முகவரி தெரியவிலை - சிறு
குறைபோல் எதுவோ கனக்கிறது.

தினமும் தொடரும் யாத்திரையின் - நெடுஞ்
சிகரம் தேடும் வேள்விகளின்,
கனவின் தோல்விகள் இனந்தெரியாச் - சிறு
கவலையின் வடிவம் காண்கிறதோ?

அமுதசுரபி, தீபாவளி மலர் - 1996

## நாளெனக்குப் போதவிலை

என்று முழுமைபெறும் என்கவிதை: செய்தவரை
நின்று நிதானித்து நினைந்து வரி, வரியாய்ப்

படித்தேன்: பலவரிகள் பழுதென்று பட்டதனால்
அடித்தேன்: மறுப்டியும் ஆரம்பக் கட்டத்தில்

தொடங்கினேன்: இம்முயற்சி தொடர்ந்து பலவருடம்
நடந்து வருகிறது: நாளெனக்குப் போதவிலை.

கலையுலகம் இன்றுவரை காணா எழில்உடைய
சிலையொன்று செய்தேன்: சிறிததனை மேம்படுத்தச்

செதுக்கினேன். கை இடறச் செவிட்டியது சிற்றுளி:பின்
ஒதுக்கினேன்: வேறோர் உருவம் படைத்தற்குத்

தொடங்கினேன் மீண்டும்:இது தொடர்ந்து பலகாலம் நடந்து
வருகிறது: நாளெனக்குப் போதவிலை.

கலைமகள், ஜனவரி 97.

# நமைக்காண இயலவில்லை

தனைக்காண இயல்வதிலை விழிகள்: அன்பின்
தலைமகளே! நின்னொடுநான் கரைந்த தாலே
எனைக்காண இயல்வதுனக் கிலையோ? உந்தன்
எதிராக நிற்கின்றேன்: காண்கி லாயோ?

உடல் மீதில் எவ்விடத்தும் சிறிதோர் ஊசி
உரசிடினும் வலியுணரும் மூளை: தன்மேல்
படநேர்ந்த காயத்தும் நோவு காணாப்
பான்மைஒரு புதிர்:நமது படைப்பில் காணும்

விந்தை:அது போன்றதுவோ வெளியில் காணும்
வேதனைகட் குருகும் நீ, முழுமை யாய்என்
சிந்தையிலே உறைகின்றாய் எனினும், எந்தன்
தீராத ஆசையின்நோய் தெளிந்தா யில்லை!

நமைக்காண இயலவிலை: ஞாலம் கண்டோம்!
யார் இந்தப் புதிருக்குத் தந்தை தாயர்?
எமைக்காண இயலுவதொன் றிலையேல் ஐய!
என்செய்தோம்: என்கண்டோம்: எதற்குக் கண்டோம்?

அமுதசுரபி, ஏப்ரல் 97.

# இதயமே இறைவன்

இயலும் என்பவர்க் கெதுவும் அரிதல
எழுந்து நிற்பவர்க்(கு) இமயம் தடையல
முயலும் மானிடன் முடிவு காணுவன்
முன்னர் தோற்பினும் பின்னர் வெல்லுவன்.

மனம் துணிந்ததை வாழ்வு கண்டிடும்
மண்ணும் வானும் கடந்த சிந்தையின்
இனம் தெ ரிந்தவர் தேவர்: மானிட
இதயம் மிஞ்சிஓர் இறைவன் ஏதடா!

## நீறும் சாம்பலும்

மண் தொட விழுந்த பின்னர்
மலர்களும் குப்பை: மேகம்
விண்தொட நின்று மண்ணில்
வீழ்ந்த பின் சகதி: கோடி

கண்பட நின்ற பொற்பின்
கலையெல்லாம் கடந்து நிற்கும்
பெண்தகை இதழின் தேனும்
பிரியுமேல் எச்சில் அன்றோ

வையகம் முழுது மாளும்
மன்னவன் பிடித்த செங்கோல்
கையிருந் தகலு மாயின்
கழியலால் வேறொன் றாமோ?

சிவன் முடி நாகம் தெய்வம்:
தெரு வுறின் நச்சுப் பாம்பு
தவவுடல் அணிசெய் நீறு
தரைபடின் சாம்பல் அன்றோ?

நெருப்பிடை அழியு மேனும்,
நீள்திரி தெய்வ மன்றோ
இருப்பிடப் பெருமை ஏற்றம்:
ஏணியும் அதுவே யாகும்.

அமுதசுரபி, செப்டம்பர் 98

## கர்ப்பப் பீடம்

வேள்வி* ஓர் கழனி: நெஞ்சம்
விழைவன விளைக்கும் நன்செய்
கேள்வி ஓர் ஊற்று: ஞானம்
கேட்பவர்க்(கு) ஊறும் கேணி

சிந்தை ஓர் சுரங்கம்: தன்னுள்
தேவரொ(டு) அசுரர் வாழும்
விந்தைசேர் விந்தை: மாந்தர்
மேதைமை கடந்த சக்தி.

பாசமோர் உலகம்: அங்கு
பகுத்தறி(வு) ஆள்வ தில்லை
நேசமோர் உறவு: நட்பு
நிறை, குறை கணிப்ப தில்லை

காண்பன கடந்து, நெஞ்சம்
கருதுப மிஞ்சும் ஆழச்
சேண்மை ஓர்அந்த ரங்கம்
சிந்தையின் கர்ப்பப் பீடம்.

---

★ முழு ஈடுபாடு கொண்ட முயற்சி

## வேள்வி ஒரு விளை நிலம்

திரும்பிய பக்கம் எல்லாம்
தீமைகள் மலியத் தீயர்
விரும்பிய யாவும் பெற்று
விளங்கிடும் தோற்றம் கண்டும்

அறத்தினை எளிதென் றெண்ணி
அல்வழி செல்வோர் தங்கள்
திறத்தினில் சால்பு சேராச்
சிறுமையர் வளர்தல் கண்டும்

மலையென உயர்ந்து நின்ற
மாண்பினர் புனிதம் சேர்த்த
தலைமையில், சிறையில் தள்ளத்
தகுந்தவர் அமர்தல் கண்டும்

மயங்கினை நெஞ்சே! சற்று
மலைத்தனை: மேலே செல்லத்
தயங்கினை: நமது பாதை
தவறுடைத் தல: நீ அஞ்சேல்

---

★ முழுமையான ஈடுபாடு கொண்ட முயற்சி

வய்யமே பிளப்ப தேனும்
வான் இடிந்(து) இழிவ தேனும்
உய்யவோர் பாதை காண்போம்.
உலகினில் நாளும் தீமை

நின்றதாய்ச் சரிதை இல்லை
நேர்மையை என்றும் நீசம்
வென்றதாய்ச் சரிதை இல்லை:
விழைவொடு திசையும் கொண்ட

ஆள்வினை தோற்ற தில்லை
அறவழி தவிர்ந்தி டாத
வேள்வியும் திறனும் மண்ணில்
'விண்ணகம்' படைத்த ளிக்கும்.

# பொய்யாப் புலவனின் புதிர்

நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு - குறள்

★ ★ ★

நெருநல் உள்ளவன் இன்றிலை என்பதில்
பெருமைஎன்: வள்ளுவர் பேச்சின் பொருள்என்?

கலையில் கல்வியில் கற்பனைத் திறனில்
மலையென நின்றவன்: வையமே கண்டு

வியந்த மாண்பினன்: விண்ணும் மண்ணும்
பயன்பெறு வாழ்வினன்: படுத்தான், மாய்ந்தான்.

ஞாலம் கண்டன யாவினும் நுழைந்து
காலம் முழுவதும் கற்றன அனைத்தும்

எய்துதற் கரியன இயைந்த போதெலாம்
செய்வதற் கரியன செய்தவர் திறனெலாம்

விசையினை அழுத்த, விளக்குகள் யாவும்
அசைவெது மில்லா(து) அணைவது போன்று

மறைந்தன: கணத்தில் மானிட வளங்கள்
குறைந்தன: நெஞ்சம் குமுறும்இவ் விழப்பில்,

பெருமைஎன்? வள்ளுவர் பேச்சின் பொருள்என்?
வருடம் பலயாம் வருந்தி முயன்று

ஈட்டிய திறனெலாம் இமைக்கும் பொழுதில்
காட்டினில் எரிவது காணும் கொடுமையில்.

புலவரில் தலைமகன், பொய்யா மொழியினன்
உலகியல் வாழ்வதன் ஊற்றினைத் தொட்டவன்

பெருமை கண்டதென்? பெருந்தகை கூற்றின்
பொருள்என்? தத்துவப் புலவர் சொல்வரோ?

அமுதசுரபி, ஜனவரி 97

## நகல் அன்று: மூலம்

உறுப்பினிலே ஒன்றல்லர்: உடலம் வாய்ந்த
உரத்தினிலே ஒன்றல்லர்: இயற்கை தந்த
பொறுப்பினிலே ஒன்றல்லர்: ஆணும், பெண்ணும்
பூரணத்தின் இருபாதி: நகல்கள் அல்லர்.

சமம் என்ப துடையிலிலை; அழகு செய்யும்
தன்மையிலும் அஃதில்லை; வருவாய் தேடி
அமர்கின்ற பதவி எதும் சமத்து வத்தின்
அலகன்று: சமநிலையின் ஆத்மா வேறு.

மின்விசையின் துணைகொண்டு வாக னங்கள்
விண்வெளியில் இயங்குவது விளைந்த நாளில்
தன்விசையின் பேருந்து சாலை மீது
தையலர்கள் ஒட்டுவதில் 'சமம்' என் கண்டீர்?

மதிநலத்திற் சமமாவர்: ஆய்ந்து பேசும்
மன்றத்திற் சமமாவர்: தலைமைப் பண்பின்
விதிமுறையிற் சமமாவர்: அன்பில், பண்பில்
மேலாவர் என்பதுவும் மிகைஒன் றன்று.

ஆணுலகம் மேலன்று: மகளிர் மண்ணில்
ஆடவர் தம் நடைமுறைமேல் ஆசை கொண்டு
பேணுவது பீடன்று: பெண்கள் ஆணின்
பிரதியலர்: சரிபாதி பேறு பெண்மை.

மூலத்தை நகலாக்கல் முறையா? பெண்கள்
முன்னேற்றப் பயணத்தின் முதலாம் மேழிச்
சீலத்தைத் துவக்கியவர்: அன்பால் ஆளும்
திறனுடையர்: நாகரிகச் சிற்பி பெண்டிர்.

அமுதசுரபி, டிசம்பர் 1996.

## இலங்கைத் தமிழரின் ஏமாற்றம்

அந்நியர் ஆண்ட காலை
அணிவகுத் தெதிர்த்து நின்றோம்.
இந்நிலம் ஈரினத்தின் இல்லம்
என்(று) இணைந்து வாழ்ந்தோம்.

மக்களை ஈர்த்துச் சேர்த்து
வலிமையைப் பெருக்கு தற்குத்
தக்கதோர் இயக்கம் காணும்
தலைமையை முதலில் ஏற்றோர்,

விடியலின் சோதிகாண
விடுதலைக் கதிரைத் தேடும்
நெடியதோர் பயணத் தில், முன்
நின்றவர், தமிழர் அன்றோ?

விலங்குகள் அறுந்த பின்னர்,
விடுதலை புலர்ந்த பின், நும்
களங்கமும், வஞ்ச நெஞ்சும்
கள்ளமும் கண்டு நொந்தோம்

தோளொடு தோள் இணைத்துச்
சுதந்திரப் போரில் நின்ற
நாளெலாம் கனவோ? அந்த
நட்பெலாம் வேடம் தானோ?

## சபதம்

வாழ்ந்த கூரையை நீங் கினம்: விரி
வானம் மண்ணிடை வாழ்ந்தனம்
ஆழ்ந்த நெஞ்சிடை ஆழ்ந்த எம்நில
ஆசை யால்துயர் ஆற்றினம்.

பெற்ற மண்ணையும் நீங்கினம்: தமிழ்
பேசும் எல்லைகள் தாண்டினம்
சுற்ற மென்பவை அற்று வெம்புயல்
தோணி போல்அலை கின்றனம்.

ஏதும் ஊர் என எவரும் கேள்என
எங்கள் முந்தையர் கூறினார்
ஏதும் ஊரிலை: எவரும் கேளிலை
ஏங்கி ஈழவர் மாய்கிறோம்.

அயல கத்தினில் அகதி யாகயாம்
அழிகி றோம்:பலர் மடிகிறோம்
துயர வெம்மையின் உச்சி, இன்று, யாம்
சொந்த மண்ணிலும் அகதிகள்

ஒன்றை நம்பினம்: ஒன்றை எண்ணினம்
ஊழி யாயினும் கைவிடோம்
என்றை மண்ணிடை எமது நற்றமிழ்
இறைமை காணுமுன் ஓய்ந்திடோம்.

தாமரை, மே 96.

## கடலில் ஒரு கல்லறை

பெற்ற நிலம் துறந்து பிரியமுடன் வாழ்ந்திருந்த
சுற்றம் துணை பிரிந்து, தோணி துணையாகக்

கடல்தாண்டி வேறுநிலக் கரைசேர்ந்து வாழ்வமெனும்
திடமோடு வாழ்விலொரு திருப்பத்தைக் காண்பமெனும்

கனவோடு வந்தவர்கள்: காலமெலாம் ஓயாத
இனவாதப் போர்க்களத்தின் எரியினிலே வெந்தவர்கள்

வாடி உயிர் மெலிந்து, வாழ்வில் சுவைஇழந்து
வீடிழந்து காடுகளில் விலங்கென் றுயிர் ஓம்பி

மனிதம் எனும் பண்பனைத்தும் மறந்துவிட்ட ஆட்சியினில்
புனிதங்கள் என்பவெலாம் பொசுங்கிவிட்ட சூழ்நிலையில்

தாங்குவதன் எல்லையெலாம் தாண்டிவிட்ட வேதனையில்
யாங்கேனும், யாங்கேனும் யாக்கையினைக் காப்பமென

எண்ணியவர்: தம்மினத்தர் இருக்கின்ற மண்சேர
நண்ணியவர்: ஐயகோ நடுக்கடலில் பேரலையின்

கோரப் பிடியினிலே குமைந்து குமைந்(து) ஆவி
தீரப் பிரிந்தனர்:இச் செய்தியினைப் பார்த்த கணம்

எரிமலைகள் ஆயிரம்வந் தென்னுள்ளே சேர்ந்தாங்கு
பொறிபரப்பி வெம்மையில்இப் பூமியினைத் தீய்ப்பதுபோல

பொங்குதடா நெஞ்சம்: இந்தப் பூவுலகில் யாழ்மாந்தர்க்(கு)
இங்கும் ஒரு கல்லறையா? இப்படியோர் வையகமா?

நிலமும் பகையாயின் நீரும் பகையா? தம்
புலம் பெயர்ந்து வையகத்தில் பூமியுள பக்கமெலாம்,

நாடுடைய பண்டைஇனம் நாடோடி வாழ்வினராய்
ஓடுவதும், கால்வைக்க உரிமம் எதும் இல்லாது

வாடுவதும் காணுகிறோம்: மனித உரிமைகளை
நாடுபவர், மேடையெலாம் நாள்தோறும் வாய்கிழியப்

பேசுபவர், ஈழவரின் பெருந்துயரம் காணுதற்குக்
கூசுவதேன்? வையமிது கொடிது, கொடியதடா.

★ ★ ★ ★ ★

தோணி கவிழ்ந்த கணம், துணையின்றி நின்ற கணம்
பேணியவை அத்தனையும் பிரியும் பெருஞ்சோகம்

மின்னலென அங்கமெலாம் விரவுகின்ற நேரத்தில்
என்ன நினைத்தாரோ? எதற்காக ஏங்கினரோ?

சடங்கொன் றறியாது, தமர் சூழ்ந் தழுகாது
அடங்கிய இவ் ஆவிகளின் ஆசைகளை யாரறிவார்.

(இலங்கையிலிருந்து தமிழகம் நோக்கி வந்த பதினான்கு அகதிகள்
கடலில் மூழ்கி இறந்தது பற்றிய செய்தியின் எதிரொலி)

தினமணிகதிர், 9 ஆகஸ்ட் 1998

சடங்கொன் றறியாது, தமர் சூழ்ந் தழுகாது
அடங்கிய இவ் ஆவிகளின் ஆசைகளை யாரறிவார்.

(இலங்கையிலிருந்து தமிழகம் நோக்கி வந்த பதினான்கு அகதிகள்
கடலில் மூழ்கி இறந்தது பற்றிய செய்தியின் எதிரொலி)

தினமணிகதிர், 9 ஆகஸ்ட் 1998

# இப்படியும் ஒரு கொடுமை

ஈழத்தர் எம்மினத்தர்: மனிதர் மண்ணில்
இப்படியும் வதைகுவதோ: எளியர் நெஞ்சின்
ஆழத்தின் ஆழத்தில் அழுத கண்ணீர்
அக்கினியில் இவ்வையம் அழியக் கூடும்

நாகரிகம பேசுதடா உலகம்: கண்முன்
நரகத்தில் சிறுபான்மை நலியும் கோரச்
சோக நிலை கண்டுமனம் துடித்துப் பொங்காச்
சுயநலத்தில் நாகரிகம் துளிர்ப்ப துண்டோ?

பாலையினும் ஓர்மருங்கில் தருவும் நீரும்
பசுமை செயக், கண்குளிரும் எழில்சேர் இன்பச்
சோலையினுக் கிடமிண்டு: திசைகள் நான்கும்
துயர்பரக்கும் கொடுமையடா தமிழர் ஈழம்

மானிடர்தம் உரிமைக் கோர் வடு: நன் மாந்தர்
மானமெனும் பண்புக் கோர் ஈம பூமி
கானிடைமுன் வாழ்ந்தவரும் கண்ட தில்லாக்
காட்டுணர்வு கட்ட விழ்ந்த கோரக் காட்சி

வான்கொண்ட, மண்கொண்ட, வாரி கொண்ட
வலிமையொடு வன்முறையில் ஆள்வோர் கேளீர்
நான்கண்ட உண்மையிது: உரிமை வேட்கை
ஞாயிறினும் வெய்யதடா: யாவும் தீய்க்கும்

இருபதொரு நூற்றாண்டை எட்டும் வையம்
எத்தனையோ சாதித்த தென்று கூறும்
பெருமைகளில் 'சிறுபான்மை சமபங் கேற்கும்'
பேறிலையேல் பேதையர்காள் பெரிதென் கண்டீர்.

## மனித உரிமைகள்

அன்று காவலர் வந்து 'வன்முறை
யாளர் கண்டிரோ' என்றனர்
என்றும் எம்மவர் அன்ன மாந்தரை
இங்கு காண்டிலம் என்றனம்.

நேற்று வந்தனர்: 'சதிகள் செய்பவர்
நிற்ப ரோஇவண்' என்றனர்.
சாற்று கின்றனம்: உண்மை அன்னவர்
சாயல் கண்டிலம் என்றனம்.

இன்று வந்தனர்: எம்மை யே அவர்
எண்ணி வந்தது தேறினம்.
நன்று காவல! என்றெ முந்தனம்
நாளை எம்நிலை காண்கிலம்.

## செந்தமிழ் தந்த செல்வம்

மானுடர் அமரர் அல்லர்: வயதினை வென்று நிற்கும்
ஊனுடல் உலகில் இல்லை: உண்மை இஃதெனினும்,
மண்ணில்

இறப்பில படைக்கும் ஆற்றல் இயன்றவர் மனிதர்: மேதைச்
சிறப்பினர்; துருவி ஆயும் தெளிவினர்: காலம் என்னும்

அருவமும் நுழைந்து தேடும் ஆய்வினர்: அணுவின் நொய்ய
கருவினும் நுழைந்து காணும் கண்ணினர்: கருத்தின் எல்லை

மண்ணையும் விஞ்சும்; ஆழ்ந்த வாரியும் விஞ்சும்; சூழ்ந்த
விண்ணையும் விஞ்சும்: தாரை வெளியையும் விஞ்சும்
என்னும்

திருவுடைத் தெய்வ மாந்தர் தெளிந்தன அழிவ தில்லை.
பெருமிதம் கொள்ளத்தக்க பேறுடை மனித சாதி

பண்புடை வாழ்வு கண்ட, பண்டுதொட் டுயர்ந்து நின்ற,
மண்புகழ் தமிழர் தங்கள் மாண்புகள் உருவம் பெற்றுத்

தரையிடை நடந்த தென்னும் தன்மையன்: முடிவி லாத
திரையெனும் மனித வாழ்வின் தீர்விலாப் புதிர்கள் யாவும்

ஆய்ந்தவன்: அடித்த ளத்தின் அடித்தளம் காணும் ஆற்றல்
வாய்ந்தவன்: விரிந்த வானின் வண்ணங்கள் போன்ற கோடி

இனமெனும் பேதம்: மற்றும் இடமெனும் பேதம்: மாறும்
தினமெனும் பேதம்: யாவும் தீர்த்தொரு பொதுமை கண்டு

வாழ்வியல் படைத்த மேதை, வள்ளுவன் தந்த முப்பால்
சூழ்நிலை அனைத்தும் தன்னுள் சூழ்ந்தொரு பாதை காட்டும்

மானிட வேதம்: இந்த வையத்தர் அனைவர் கட்கும்
தேனினும் இனிய எங்கள் செந்தமிழ் தந்த செல்வம்:

பொதுமறை என்று வையம் போற்றுதற் குரிய வேண்டின்
முது மறை குறளே என்று மொழிகுவர் நுழைந்த நூலோர்.

- உலகப் பொதுமறை வள்ளுவம்: கவிதைத் தொகுப்பு:
மு.க.தங்கவேலன், மல்லிகா பதிப்பகம், 1998.

## புதுப்பிறவி

வள்ளுவரும், இளங்கோவும், மற்றும் இங்கு
வாழையடி வாழையென வந்த மேதைத்
தெள்ளுதமிழ்ச் சான்றோரும், எண்ணி எண்ணித்
தேர்ந்தனவும் தெளிந்தனவும் கடந்து நிற்கும்

புதிய துறை, புதிய கலை, நாளும் நாளும்
புலர்கிறது வையத்தில்: புதிய காணும்
கதிநிதமும் வளர்கிறது: காலம் வெல்லக்
கன்னிமொழி பெறவேண்டும் காற்றின் வேகம்.

மறைகின்ற நூற்றாண்டில் மய்யம் கொண்ட
மாற்றங்கள், புயலாக வரும்நூற் றாண்டின்
கரைநின்ற தோற்றத்தைக் கண்டோம்: அந்தக்
காட்சியெலாம், தமிழ்வழியே காண வேண்டும்.

மாற்றத்தை எதிர்கொள்ள மனமில் லாதார்
வளர்கின்ற வழிதேடார்: அவர்தம் பாதை
ஏற்றத்திற்(கு) ஏணியல: சங்கம் கண்ட
எங்கள் தமிழ் புதுமைகளோ(டு) இணைய வேண்டும்.

பழம்பெருமை வேரெனினும் உலகின் தேவை
பயன்கொண்ட காய்கனிகள் மலர்கள் அன்றோ?
சுழல் கின்ற உருளியல: உயர்வு நோக்கித்
தொடர்கின்ற நீள்பயணம் மொழியின் வாழ்வு.

மனிதஇனம் மறுபிறவி பெறுமோ: அன்றி
மதத்தலைவர் கற்பனையோ அறியோம்: ஆயின்
இனியதமிழ் 'புதுப்பிறவி' எடுக்க வேண்டும்
எதிர்காலத் தேவையெலாம் ஏற்க வேண்டும்.

தமிழ் நானூறு, 1997.
கவிதைத் தொகுப்பு
புலவர் பி.சி. கணேசன்

## எளிமையே வலிமை

எழுத்துருவைச் சீரமைப்பீர், எழுதல் கற்றல்
எளிதாக்க வழிவகுப்பீர்: கூடி நின்று
வழுத்துவதால் தமிழ்வளர்வ தில்லை; வாழ்வில்
மாற்றம்தான் மேம்பாட்டின் வாயில் ஆகும்.

சொல்லாக்கம் புதுவழியில் துணிந்து காண்பீர்.
தொல்காப்பி யத்திற்கும் துணை நூல் செய்வீர்
எல்லார்க்கும் கல்வியெனும் இந்த நாளில்
ஏணிபல புனையாதார்க்(கு) ஏற்றம் இல்லை.

மாறாத புனிதமென வய்ய வாழ்வில்
மானிடர்கள் போற்றுவதற்(கு) எதுவு மில்லை.
வேறான உத்திபல வினைக்குத் தேடல்
வெற்றிக்கு வழி: இஃது வேத வாக்கு

இறுக்கத்தால் பயனில்லை: இளக்கம் தேவை.
இலக்கண நூல் பயிற்சியெலாம் எளிமை செய்வீர்
மறுக்கின்ற வைதிகர்கள் வய்யம் செல்லும்
வழியறியார். எளியர்: அவர் வழி தவிப்பீர்

## எதிர்காலம் இலை

முன்னிருந்து பன்மொழியின் அன்னை: மண்ணில்
முதுகுடியின் தாய்மொழி: எம் தமிழை இன்றும்
கன்னியெனக் கூறுவது 'தனிமை', 'தூய்மை'
கருதியல: இளமைநலம் 'கன்னி' யன்றோ?

வரை கடந்த புதுமைகளை அலசி ஆய்ந்து
வரவேற்று வளம்சேர்த்து வளர்ந்தாள் அன்னை:
திரையமைந்த தீவாக நின்ற தில்லை:
தென்றல்வரும் சாளரங்கள் திறந்தே வாழ்ந்தாள்

ஆய்வியலும் அறிவியலும் ஆளும் காலம்:
அண்டங்கள் படிப்படியாய் அஃகி, அஃகிச்*
'சேய்மை'எனல் பொருள்குன்றி மறையும் காலம்:
'சிற்றூராய்ப்', பெருவையம் சிறுகும் காலம்:

வையத்தின் துருவத்தின் முனையில் எங்கோ
மலர்கிறது புதுமைஎனின், மறுநாள் யாவும்
ஐயத்திற் கிடமின்றித் தமிழில் சேர்க்க
அடிப்படையும், உத்திகளும் அமைக்கும் காலம்.

---

★ அஃகி - சுருங்கி

நூலான கல்விவளம் துறைகள் தோறும்
தமிழ்மொழியின் வழிகாணத் தரணி எங்கும்
வரலாறு புதிதாகப் படைக்கும் காலம்.
மலைபோல நம்கண்முன் வளர்ந்து நிற்கும்

எதிர்காலத் தேவைகளை எண்ணும் காலம்.
எண்ணுவதற் கியலாத அசுர வேகப்
புதிர்கண்டு. அலைஅலையாய்ப் புதுமை கண்டு,
புயல்போல வருகின்ற மாற்றம் கண்டு,

'செய்நுட்ப' முடிவுசெய்யும் தெளிவு கண்டு
செல்கின்ற திசைகாண முனைந்து நின்று,
எய்திட்ட அம்பென்ன இலக்கு நோக்கி,
எதிர்கால உயர்வுக்கு ஏணி தேடி,

வரலாறு படைக்கின்ற காலம்: எம்மோர்
வருநாளின் தேவைகளை மனங்கொள் ளாது
திரளாகச் சேர்ந்திடுவர்: சங்க காலச்
சிறப்புகளைப் பேசிடுவர்: இடையில் சென்ற

காலத்தின் வளர்ச்சியெலாம் மாசு தோய்ந்த
கலப்பென்பர்: கல்வியுகம் கண்ட இந்த
ஞாலத்தின் தேவைகளை எண்ணி ஏற்கும்
ஞானமிலார்க் கிவ்வுலகில் 'நாளை' இல்லை. ●

கதிரவன், தீபாவளி மலர், 1996

## யாருக்காக ... ?

படித்தனம்யாம், புரியவிலை: எண்ணி எண்ணிப்
பார்த்தனம்யாம் விளங்கவிலை: கவிதை என்று
அடித்தெமக்குச் சொல்கின்றீர்: ஏற்றோம் நுங்கள்
அருங்கவிதை: ஆயின்இது யாருக் காக?

எதுகைஎனல் மோனைஎனல் இன்னல் என்றீர்:
இலக்கணத்தின் தளைகளெலாம் எடுத்தெ றிந்தீர்.
புதுமையினைப் படைக்கின்றீர், போற்று கின்றோம்:
புரியாத நும்கவிதை யாருக் காக?

இலக்கியத்தில் நூறுவகை எடுத்துச் சொல்வீர்:
இன்றுவரை வளர்ந்துள்ள இயக்கம் எல்லாம்
விளக்கியெமக் குரைத்திடுவீர், நன்றி: ஆயின்
விளங்காத நும்படைப்பு யாருக் காக?

கள்ளியினைத் தலைப்பாக்கிக் கவிதை செய்வீர்:
கவிஞர்யாம், 'பயன்பாடு' கருதோ மென்பீர்:
முள்ளினையும் 'கருவாக்கி' முதல்நூல் செய்ய
முன்வருவீர்: நும்படைப்பு யாருக் காக?

## எழில் தேவை: இளமை தேவை

அட(வு) என்னல் கரணமெனல் அறிவோம்: மேடை
ஆட்டத்தின் இலக்கணநூல் ஆய்ந்தோம்: ஆயின்
நடனத்திற்(கு) அழகுருவம் தேவை: ஆடும்
நாட்டியத்திற்(கு) இளமை நலம் தேவை: தேவை.

கண்ணொளியில் அவையினரை ஈர்க்கத் தக்க
காந்தத்தின் விசைவேண்டும்: வெண்பல் மின்னும்
புன்னகையில் முழுமதியின் பொற்(பு) அனைத்தும்
புலர்கின்ற எழிலுணர்வு பொங்க வேண்டும்.

பாடுவதற்(கு) இனிய குரல்: கற்பிக் கின்ற
பண்டிதருக்(கு) அன்புமொழி: மேடை யேறி
ஆடுபவர்க்(கு) அழகுருவம் தேவை: மற்றும்
அவரவர்தம் துறையறிவில் ஆழம் வேண்டும்.

## சாதியிலாத சமுதாய நீதி

அமுதூறும் என்றெண்ணிக் கடைந்த பாலில்
அரவத்தின் நஞ்சன்று விளைந்தால் போன்று
சமுதாய நீதிக்கென் றிறைத்த நீரில்
சாதியெனும் களைவளரும் தன்மை கண்டோம்.

பிணியனைத்தின் பெரியபிணி: தொன்று தொட்டுப்
பிரியாது வருகின்ற தொழுநோய்: தீர்க்க
அணியமென வந்தவர்கட்(கு) அளவொன் றில்லை:
அனைவருமே தோற்றகளம்: அதனை வெல்லத்

தருணமிது கல்வியுகம்: அடிவே ரோடு
சாதியினைத் தகர்ப்பமென நினைத்தோம்: ஆனால்
ஒரு துணைவிட்(டு) ஒருதுணையை ஒண்டி வாழும்
உண்ணி இது: உண்ணி இது: உயிர்பி ழைக்கக்

கொழுகொம்பு புதிதாகத் தருவ துண்டோ?
கூற்றுவனுக் குயிர்தருதல் கொடுமை அன்றோ?
வழுவிதனைச் செய்யாது சமுக நீதி
வளர்கின்ற வழிகாண்போம்: மானி டத்தின்

மேதைக்குப் புறம்பென்ப தெதுவு மில்லை
வேண்டுவன விளைகின்ற கழனி காணும்
பாதைக்கு வகைசெய்வோம்: சாதி என்னும்
பழியறியாச் சமுதாயம் படைத்து வாழ்வோம்.

# பன்மை போற்றுவம்

ஒற்றுமை என்பது ஒருமை அன்றடா
உறவு வேறடா: உரிமை வேறடா
பற்று வையகப் பண்பின் சீரடா
பன்மை மானிடர் பழமை வேரடா

மனிதம் அச்சினில் வார்ப்ப தன்றடா
மலர்கள் யாவுமே வண்ணம் ஒன்றெனின்
இனிமை கண்களுக் கியற்கை சேர்க்குமோ
எதுவும் ஒன்றெனின் இன்பம் ஏதடா

தார கை க்குலம் வான் ம லர்ந்தது
தரையில் பூத்தனர் மனிதர்: ஆயிரம்
பேர் அமைந்தன பாதை: ஆயினும்
பேதம் வேறடா! பிளவு வேறடா!

வேறு பாடுகள் அற்ற மண்ணிலே
வேட்கை ஏதடா: வினைகள் ஏதடா
மாறு பட்டன போற்றும் மானிடர்
வய்ய கம்தனில் தேவர் அல்லவோ!

பன்மை இந்தியப் பண்பின் மூச்சடா
பன்மை போற்றுவம்: பன்மை போற்றுவம்
மன்பதைக்கொரு செய்தி: வாழ்க்கையில்
வழிகள் எண்ணில: மனிதம் ஒன்றடா!

இலக்கியப் பீடம், ஏப்ரல் 1998

## புழுக்கம்

காற்றுவர வில்லை இவண்: கடும் புழுக்கம் தோன்றுகிற
ஊற்றுளதோ இவ்விடத்தில்: உடலை வருத்து கின்ற

அழுத்தம் மிகுகிறது: யாரோ நெடுங்கயிற்றில்
இழுத்தெம்மைக் கட்டி இறுக்குவது போன்றதொரு

வருத்தம் வளர்கிறது: மனத்துள் ஒரு பாறாங்கல்
இருத்துவது போன்ற தொரு இன்னல் வளர்கிறது

இனமறியக் கூடவிலை: இதயத்துள் ஏதோ
கனமொன்று வன்மையுடன் கால் பதித்து நிற்கிறது

பகலென்பர்: ஆயின் இவண் பரிதிஒளி தோன்றவிலை
நகர்கின்ற ஓசையிலை: யாங்கும் பெருந் தேக்கம்

அரும்பு மலரவிலை: அலர்ந்த இதழ் தேடிச்
சுரும்(பு) எதுவும் சூழவிலை: தொட்டியிலே வைத்துள்ள

செடியில் பசுமையிலை, செழிப்பில்லை: இவ்விடத்தில்
கொடிய தொரு சூழல் குவிந்திருப்ப தேன் என்று

அறைகளை யான் ஒவ்வொன்றாய் ஆய்ந்தேன்: பலபொருள்கள்
நிறைய அடைத்ததொடு நில்லாது, வாயிலெலாம்

தாளடைத்து யாவும் தடுத்து விட்டார்; பாவியர்கள்
சாளரங்கள் அத்தனையும் சாத்தி விட்டார்: வாழ்வதெவண்?

சேய்மையுள மாசுவந்து சேராது காப்ப மெனும்
தூய்மை வழித் தூதுவர்காள் சொல்வ துமக் கொன்றுண்டு

இருட்டறையில் தூய்மையில்லை: ஏணியிலை: ஏற்றமிலை
குருட்டுலகில் கூடுவதில் குலம்தழைக்க வாய்ப்புளதோ. ●

ஜூன், 1998 : அமுதசுரபி

## ஓசையால் உயர்வதில்லை

சாதியை ஒழிப்போம் என்றார்
தமிழர் தம் வாழ்வில் அஃது
ஆதியில் இருந்த தில்லை
அந்நியர் கொண்டு வந்து

புகுத்திய தீமை என்றார்
புன்மையில் புன்மை யாளர்
வகுத்துள கொடுமை என்றார்
மனிதரை இழிவு செய்யும்

இழிவுகள் அனைத்தும் மிஞ்சும்
ஈனம் இச் சாதி இந்தப்
பழியினை வேரி லாது
பறித்தெடுத் தழிப்ப தெங்கள்

முதற்பணி என்று சொல்லி
முழங்கினர்: நாடு முற்றும்
அதற்கென எடுத்த கூட்டம்
அளவில: இந்த நாளும்

சாதியின் பிடி த ளர்ந்த
தாக்கம் ஒன் றில்லை: மாறாய்
ஆதியில் இலாத சாதி
அமைப்புகள் உருவம் பெற்றுச்

சங்கமாய் அங்கு மிங்கும்
தழைத்தன: பையப் பைய
எங்கணும் கிளைகள் தோன்ற
எழுந்தது: பதவி தேடும்

அரசியல் தலைவர் சாதி
அமைப்பினை அரவ ணைத்தும்
பரவியும், சலுகை தந்தும்
பதவியில் பங்கு தந்தும்

மன்றிலே சாடி னாலும்
மறைவிலே குலவும் வண்ணம்
வென்றது சாதி: ஆட்சி
வேட்கையில் திசை இ ழந்து

வாக்குகள் வங்கி நோக்கி
வணங்கிடும் தலைவர் தங்கள்
போக்கினால் வளரும் புன்மை:
பொதுநலப் புலனி லாது.

ஏழ்மையை முதலாய் வைத்து
எளியரைத் திசை தி ருப்பும்
தாழ்வினர் வளர்க்கும் புன்மை
தன்னலம் தலைமை ஏற்ற

சூழலில் தழைக்கும் புன்மை:
தொன்றுதொட் டிருந்து வந்த
நீழலை யிழந்த சாதி
நீங்கும் என் றிருந்த ஆசை

போனது: புரட்சி எல்லாம்
பொசுங்கின: புரட்சி யாளர்
ஊனர்கள் ஆனார்: தங்கள்
ஊன் வளர்த் துடல் வ ளர்க்கும்

சிறுமையில் கொள்கை எல்லாம்
தீயிடை மடுத்தார். சூழும்
வறுமை, கூர் வறட்சி தோய்ந்த
மனத்தினர், தம்பின் நிற்கும்

ஆர்வலர் வீதி யெங்கும்
அலையென ஆர்ப்ப ரிக்க
ஊர்வலம் எடுப்பார்: வையம்
ஓசையால் உயர்வ துண்டோ?

## இயற்கையே என் செய்தாய் நீ ...?

புலம்பலும் தீமை முற்றும்
பொசுக்கிடும் கனலும், கையில்
சிலம்பொடும் வந்தாள் வாதத்
தெளிவினால் தனது செய்கை

தவறென உணர்ந்த மன்னன்
தரையிடை வீழ்ந்தான்: தானே
அவலன் என் றேற்றான்: ஆங்கே
ஆவியைத் துறந்த மண்ணில்

மானமொன் றணுவு மின்றி
மலத்திலும் அரிசி தேடும்
ஈனர்கள் பிறந்த தென்னே
இயற்கையே என் செய் தாய் நீ!

## தாழ்வாரத் தவம்

தாழ்வாரம் நிதம்நின்று துதித்துப் பாடித்
தவம்செய்வார்க் குயர்வுசெயும் தன்மை கொண்டார்
ஆள்வாராய் வருவதொரு கொடுமை: மண்ணில்
அடிமைநிலை எனும்உணர்வு முழுமை பெற்று

மானுடர்தம் வடிவத்தில் உலவு கின்ற
வாழ்க்கைஒரு பெரும்கொடுமை: மனிதர் பெற்ற
ஊனுடலம், கடவுளரும் விரும்பி ஏற்ற
உயர்வுடைய திருமேனி, குறுகிக் கூனி

நிற்கின்ற விரசமொரு கொடுமை: ஆள்வார்
நிழல்போல அறிஞர்சிலர் தம்மை முற்றும்
விற்கின்ற காட்சிஒரு கொடுமை: இஃதை
விளம்பவொரு வார்த்தையிலை: மனித சாதி

புனிதமெனக் கூறுவதொன் றுண்டு: வையம்
போற்றவொரு பொருள்உண்டு: நிமிர்ந்து நிற்கும்
தனிமனிதன் பெருமை: அது, தாழ்ந்த காலை
தரையோடு, கடல்வானம் தாழ்ந்த தம்மா!

தமைவிற்றும் பெறுவதற்குப் பொருளொன் றுண்டோ?
தன்னலத்திற் கரையுமிவர் தாகம் யாதோ?
இமைவிற்றுக் கருமணியைக் காப்ப துண்டோ?
இழிவுக்கும் இழிவுசெயும் இழிஞர் கண்டோம்.

தாமரை, டிசம்பர் 96.

## விற்பனைக்கு ஒரு மாநிலம்

மரமேனும் சேகுளது கண்டோம்: வாழை
மட்டையும் தெம்புளது வளர்ந்ததன் பின்னர்
உரமேதும் இல்லாத புதுமை: எம்மோ(டு)
உலவுகிற அரசியல் தலைவரெனும் விந்தை.

காற்றிலே வளைகின்ற தெனினும், நதியின்
கரையுள்ள கோரைக்கும் நாருண்டு கண்டீர்
சோற்றிலே செய்தகொலுக் கூட்டம். கொள்கை
துளியேனு மில்லாத தோற்பொம்மை ஆட்டம்

என்பிலது புழுவென்று சொன்னார். மெய்யில்
என்புள்ள எம்தலைவர் புழுவாகி நின்றார்
மன்பதையில் புதிய அவ தாரம். டார்வின்
மறுபிறவி கண்டாலும் புரியாத கோலம்.

மனிதர்க்கு விலைபேசி வந்தார். பின்னர்
மாநிலம் முழுதுமே விற்பனைக் கென்றார்
புனிதர்க்கு வாரிசெனச் சொன்னார். சேற்றுப்
புழுவினும் புழுவினும் தாழ்ந்திங்கு நின்றார்.

(1996 இல் நடந்த சட்டமன்ற, நாடாளுமன்றத் தேர்தல் சமயத்தில்
சில தலைவர்களின் அணுகு முறை பற்றிய சிந்தனையின் எதிரொலி)

## சுமைதாங்கிகள்

சாதியெனும் பெரும்பாரம் தாங்கி நிற்கும்
சமுதாயச் 'சுமைதாங்கி' நாங்கள்: எம்மோர்
ஆதிமுதல் கண்டபிணி: புதுமை என்னும்
அருமருந்து தீர்க்குமென அறிஞர் சொன்ன

சோதிடமும் பொய்யாகி, நாட்கள் தோறும்
சுமைஇன்னும் கனமாகி, அசைந்து செல்லும்
மேதியினும் கதிகுன்றி, நனைத்துத் தூக்கும்
வீண்செயலில் ஆற்றலெலாம் விரயம் செய்வோம்.

அன்பென்ன, அருளென்ன, மதங்கள் போற்றும்
ஆண்டவனின் பெயர்கூறிப் பகைமை சேர்ப்போர்
வன்முறையின், மதவெறியின் பாரம் தாங்கி
வளைந்துள்ள 'சுமைதாங்கி' வழிக்கல் நாங்கள்.

வேளாண்மைத் தொழில்கண்டு, நிலமும் நீரும்
விளைக்கின்ற வளம்கண்டு, கல்வி, கேள்வி,
தாளாண்மை துணை நிற்கத் தொழிலின் நுட்பத்
தடம்கண்டு சாதனையின் சரிதம் கண்டு

வளர்ந்துளது மானிடம்என் றுரைப்பார்: எல்லாம்
வார்த்தையடா: வறுமையினைத் தாங்கித் தாங்கித்
தளர்ந்துள்ளோம்: கண்ணிருளப் பசியின் பாரம்
தாளாது முனகும்'சுமை தாங்கி' நாங்கள்

மரபென்பர்: முன்னோர்கள் வகுத்துத் தந்த
வழியென்பர்: கண்மூடி வழக்கம் கோடி
தரமெதுவும் அறியாது தோளில் ஏற்றித்
தாங்குவதற் கேற்ற'சுமை தாங்கி' நாங்கள்

பாரம்இனும் வளர்கிறது: தாங்கு தற்குப்
பழகுகிறோம் என்றாலும் இந்த மண்ணில்
ஈரமிலா நெஞ்சத்தின் கனத்தைப் போல
எமைஅழுத்தும் கொடுமையிலை: மற்றோர் துன்பம்

கருதாத தன்னலத்தர் கல்நெஞ் சத்தின்
கனம்பெரிது: கனம்பெரிது: கயமை யாவும்
உருவாகும் மையம்:அது. மனிதம் கண்ட
உயர்வுகளின் பெருமிதத்தின் ஈம பூமி.

ஓம் சக்தி, தீபாவளி மலர் - 1996.

## ஐந்தில் ஒன்றும், நான்கும்

வையத்திற் சிறுபான்மை நீவிர்: ஆனால்
வாய்த்துள்ள வளம் அனைத்தும் வளைத்துக் கொண்டீர்:
தெய்வத்தின் பெயர்சொல்லித் தொழுகின் றீர்!இச்
சிறுமையினை ஏற்கஒரு தெய்வ முண்டோ?

ஐந்தில்ஒரு பங்கினர் நீர் உலகச் சொத்தில்
ஐந்தில்ஒரு நான்கினையும் அனுப விக்கும்
நிந்தையினைச் சுமக்கின்றீர்: கூச்ச மின்றி
நீதியுரை பகர்கின்றீர் உலகுக் கெல்லாம்!

தனிமனிதர் உரிமைஎனச் சொல்வீர்: இந்தத்
தரணியெலாம் மானிடத்தின் உரிமை காக்கும்
புனிதரெனப் புறப்பட்டீர்: உம் வி யூகம்
புரியாத எளியர் உமைப் போற்றி நிற்பர்.

தனிமனிதர் ஏழைஎனல் சகசம்: இந்தத்
தாரணியில் கண்டதுயாம்: ஆனால் இன்று
நனிவறிய நாடுகள்ஓர் புறமும், செல்வ
நலம்பொங்கும் நாடுகள் ஓர்புறமும் நிற்க,

---

★ இன்று உலக மக்கட் தொகையில் முன்னேறிய நாடுகளில் உள்ள ஏறத்தாழ 20 சதவிகித மக்கள் உலகின் 80 சதவிகித வருமானத்தை அனுபவிக்கின்றனர்

வறுமையெலாம் ஒருபக்கம்: வாழ்வில் கண்ட
வளமெல்லாம் உம்பக்கம்: மனித நேயப்
பெருமைபல பேசுகிறீர்: பிறரைத் தேய்த்துப்
பெருவாழ்வு வாழுவதா மனித நேயம்?

## பாகப் பிரிவினை

ஓடுவதற் கெம்கால்கள்: கால மெல்லாம்
உழைப்பதெனின் எம்தோள்கள்: பசியில், நோயில்
வாடுவதற் கெம்முடலம்: பகைமை மிஞ்சின்
மாளுவதற் கெம்முயிர்கள்: சமுதா யத்தின்

அவலமெலாம் எம்தோளில்: சந்தில் பொந்தில்
அலைவதெலாம் எம்உரிமை: மானிடத்தின்
கவலையெலாம் எம்முடைமை: குப்பை கூளம்
கழிவனைத்தும் எம்பங்கில்: ஆள்வோர் தம்மைத்

தேர்ந்தெடுத்தல் எம்உரிமை: தேர்ந்த வர்க்குச்
சேவைசெயல் எம்கடமை: கொடிகள் தாங்க
நேர்ந்துகொளல் எம்தருமம். ஊர்வ லம்செல்
நீள்பயணம் எம(து):அவர்தாம் நின்று பார்ப்பார்.

"சமதர்மம் தொலைதூரக் கனவு: நாளை
சாதிப்பதன்(று)* என்பார்: இயன்ற மட்டும்
எமதுரிமை ஏற்றிட்டார்: மேலே சொன்ன
எம்பங்கு பிரித்தளித்தார்: என்ன சொல்ல?

அமுதசுரபி, ஆகஸ்ட்-98.

## நாளை விடியும்

நடைபாதைச் செல்வம்இது யார்பெற்ற செல்வம்
நடமாடும் கால்களிடை தூங்கும்இளம் பிஞ்சு.
உடையேது மில்லாது தோல்போர்த்த கூடு
உயிரொன்று வதிவதற்(கு) எலும்பில்செய் வீடு.

பசியோடு போராடி அயர்ந்துள்ள கண்கள்
பார்க்கவோ கேட்கவோ உறவற்ற சீவன்.
புசியாது குடல், அழலில் புண்ணான போதும்
புவிவாழ்வு நமைஈர்க்கும் புதிர்காண்ப துண்டோ?

துன்பங்கள் எண்ணற்ற துயரங்கள், நிழல்போல்
தொடர்கின்ற தம்வாழ்வில் சுகமென்ன கண்டார்
இன்பமொன் றறியாத இன்னலின் சுமையில்
ஈர்ப்(பு)அவர்க் குருவாகும் இயல்பறிவ துண்டோ?

மானிடர் சாதிக்கு வாழ்விலுள பற்றின்
மர்மத்தை ஆய்கின்ற மறையேது முண்டோ
நானிலம் சூழ்ந்துள்ள இருள்என்ப யாவும்
நாளைக்கு விலகுமெனும் நம்பிக்கை மனிதம்.

அமுதசுரபி, ஜூலை 98.

## நிலமகள் நோதல் இன்றி நிறை பயன்

மானிட சாதி வளரும் நுண்ணுயிர்
கானிடை வாழ்ந்து கழிந்த நாள்பல:

காட்டினில் கிடைத்த காய்கனி உண்டும்
வேட்டை யாடியும் விலங்கெனத் திரிந்தும்

ஆட்டினம் மேய்த்தும் ஆனினம் புரந்தும்
நாட்டிடைப் புல்வெளி யாங்கணும் பரந்தும்

நாடொன் றிலராய், நனிகுளிர் வெயிலிலும்
வீடொன் றிலராய் மேதினி வாழ்ந்த

காலம் மெல்லக் கடந்து முன்செலப்
பாலம் கண்டனர் பாவையர். அற்றைநாள்

புத்துணர் வுடையதாய், புதுயுகம் விளைக்கும்
வித்துள தாய வினையொன் றாற்றினர்.

வாழ்ந்த பதியின் மருங்கு நாற்புறம்
சூழ்ந்த நிலத்தில் தோகையர் செடி, கொடி

வளர்த்து நிலத்தின் வளத்தில் மானிடம்
அளப்பரும் செல்வம் ஆக்கும் திறன் பெறும்

பயிர்த்தொழில் தொடங்கப் பாதை கண்டனர்
உயிர்ப்புள தானதாம் உழவினில் அமைந்த

நாக ரிகத்தை நாட்டிய மாதரர்
பாகம் பெரிதுநம் பண்(பு)அவர் நன்கொடை

பயிர்த்தொழில் கண்டனர் பாவையர்: அதனினும்
உயிர்த்தொழில் இல்லை, நம் உலகின் சரிதையில்

மாதரர் படைப்பின் மாண்பினை ஆண்குலச்
சோதரர் உணரச் சொல்லுதல் நம் கடன்.

★ ★ ★

மேழியின் செல்வம் தந்த
விளைபொருள் கோடி: மாந்தர்
நாழியும் வளர்ந்தார்: மற்றும்
நலம்பல படைத்தார், கல்வி

விரிந்தது: கலைகள் கோடி
விளங்கின: வாழ்வின் நுட்பம்
அறிந்தவர், துறைகள் தோறும்
ஆய்ந்தவர் சிறந்தார்: மேலும்

இசையுடன் இயலும் கூத்தும்
எண்ணறு தொழிலும் மண்ணின்
திசைதொறும் சென்று செல்வம்
சேர்த்திடும் வணிக வாழ்வும்

மலர்ந்தன தத்து வங்கள்
வளர்ந்தன பண்பின் வாழ்வு
புலர்ந்தது: யாவும் போற்றிப்
புகழ்வதற்(கு) உரிய வேனும்

பண்டுதொட் டிருந்து வந்த
பசிப்பிணி மறைய வில்லை
உண்டியும் உடையும் வாழ்வில்
ஒருசிலர்க் கமைய வில்லை.

இருப்பதில் நிறைவி லாது
இன்றுமோர் உயர்வு காணும்
விருப்பமாம் தாகம் எந்த
வேளையும் தணிய வில்லை.

வையத்தில் அள(வு) இறந்த
வளப்பல உள்ள வேனும்
கையகப் படுத்தத் தானாய்க்
கனிந்தெதும் வருவ தில்லை.

இயற்கையின் வளத்தைக் காண
இருப்பன பலவும் மாற்றும்
முயற்சியும் தேவை: மாந்தன்
முன்செலும் பயணம் தன்னில்

தொழில்யுகம் கண்டான்: இங்கு
தொன்றுதொட் டிருந்து வந்த
வழிமுறை மாற்று கின்ற
வலிமைசேர் கருவி யான

அறிவியல், அதனின் வந்த
ஆற்றல்சேர் தொழில்நுட் பத்தின்
நெறிமுறை வகுத்தான்: இந்த
நிகரிலாக் கருவி கொண்டு

மண்ணையும் வெல்லக் கூடும்
வரை கடந் துயர்ந்த தான
விண்ணையும் வெல்லக் கூடும்
வேண்டிய அனைத்தும் காணும்

திறனுடைத் தேவன் என்று
சிந்தையின் நினைந்தான்: தன்னுள்
மறமுடை அசுரன் கூட
மறைந்துள இயல்பு தேரான்.

★ ★ ★

வருடங்கள் கழிய மாந்தர்
வாழ்நிலை உயரப் பண்டை
நெருடல்கள் மறைய, ஆயுள்
நீண்டிட இனப்பெ ருக்கம்

வளர்ந்தது: உணவு காணும்
வாய்ப்பினைப் பெருக்கும் தேவை
விளைந்தது: மேலும் மேலும்
மிகுந்தது மக்கள் கூட்டம் -

நீர்வளம் வளர்வ தில்லை
நிலப்பரப்(பு) உயர்வ தில்லை
ஏர்வளம் பெருக்கும் ஆற்றல்
ஐயர்க் குறைய வில்லை

வனமெலாம் அழித்தார், மண்ணில்
மரம் செடி, கொடிகள் பச்சை
இனமெலாம் அழித்தார்: செல்வம்
இயற்றுதல் அறியார் வாழ்வில்

உண்ணவும் பஞ்சம்: வாழும்
உறையுளும் உடையும் பஞ்சம்
எண்ணவும் இயன்றி டாத
இன்மையில் வாழும் மாந்தர்

கூட்டமோ நாளும் நாளும்
குவிவது தொடர, ஏழை
நாட்டவர் என்பாய்த் தோலாய்
நலிகுவர் உயிரைக் காக்கும்

முயற்சியே வாழ்க்கை என்னும்
முடிவினில் வதியும் மக்கள்
இயற்கையைக் காப்ப தெந்நாள்:
இன்மைகள் மறைவ தெந்நாள்?

★ ★ ★

கல்வியின் ஆற்றல் கண்டு
கற்பன விரைந்து கற்றுச்
செல்வமென் றுள்ள யாவும்
சிறந்துள வளர்ந்த நாட்டார்

இருபது விழுக்கா டுள்ளோர்
எண்பது விழுக்கா டென்னும்
திருவினைத் துய்ப்பர்: இந்தத்
தீமையின் விளைவாய் நாளும்

நுகர் பொருள் தேவை மிஞ்ச
நுகர்ந்தவை கழிவாய்ச் சேர
தகவிலா வாழ்வு மாந்தர்
தரத்தினைத் தாழ்த்த தல்லால்

மண்ணையும் தீய்த்துப் பின்னர்
வானிடை எழுந்து பொங்கி
விண்ணையும் தீய்த்த தம்மா
வெளியெலாம் மாசின் நச்சு.

★ ★ ★

வறுமையினும் கொடியதொரு மாசிங் கில்லை
வளமுடையர் வரம்பிகந்து நுகரும் போக்கின்
சிறுமையினும் நச்சமைந்த தீமை யில்லை
செல்வமுளர் சூழ்நிலையைக் கெடுக்கும் இந்தக்

கொடுமையினும் கொடுமையிலை: எழுத்தில் இங்கு
கூற ஒரு சொல் இலைதம் குடிக்குத் தாமே
கெடுதல் செயும் மானிடரின் கீழோர் இல்லை
கீழ்மை இதை உலகரங்கில் கேட்பார் இல்லை

★ ★ ★

ஆலைகள் கக்கும் நஞ்சு
அளவிலா வாக னங்கள்
சாலையில் கழிக்கும் நஞ்சு
தரமிலாக் கழிவு கோடி

பாயென விரிந்த ஓசோன்
படலத்தை அழிக்கச் செய்து
தீயன பலவும் சேர்த்தோர்,
திருவினில் திளைக்கும் நாட்டார்

வாழ்ந்திடத் தொழில்கள் தேடும்
வறிய நாட் டவர்பால் தூய்மை
தாழ்ந்திடல் தவிர்ப்பீர் என்பர்
தம்பழி அணுவும் நாணார்.

★ ★ ★

வாழ்ந்திடும் மண்ணில் மாசு
மானிட இனத்தர் தம்மைச்
சூழ்ந்துள் வெளியில் மாசு
தூய்மையின் துணைவ னான

காற்றிலும் மாசு கோடி
கழிவுகள் கலப்ப தால் நம்
ஆற்றிலும் மாசு: மண்ணின்
ஆழத்தில் தரைநீர் மாசு

இயற்கையொ டியைந்து வாழ்தல்
இகந்து, பே ராசை உந்தும்
முயற்சியில் இயற்கை தன்னை
முழுமையாய்ப் புதுப்பிக் கின்ற

ஆற்றலைக் கடந்தோம்: யாங்கும்
அளவிலாக் கழிவு கட்கு
ஊற்றெனும் தொழில்கள் செய்தோம்:
ஒழுங்கெனல் அணுவு மின்றி

வேதியல் பொருள் ஆ னாலும்
விடமெனும் கழி(வு)ஆ னாலும்
போதிய திருத்தம் இன்றிப்
புறத்துள நிலம், நீர் காற்றில்

லந்தனம்: தன்ன லத்தைக்
கருதினோ மன்றி மக்கள்
நலந்தனை எண்ணிப் பார்க்கும்
நயனிலம்: வைய வாழ்வில்

எல்லைஒன் றெதற்கு முண்டு
இயற்கைநம் சுமையைத் தாங்க
வல்லதே எனினும் அங்கும்
வரையறை உண்டு: செல்வம்

படைப்பதில் தவறொன் றில்லை
பயனுள பொருள்கள் ஆக்கம்
தடைப்படத் தேவை இல்லை
தரணியில் இன்பம் துய்க்கும்

விழைவொரு பாவ மன்று
வினைகளின் விளைவில் நெஞ்சம்
நுழைவது தேவை: சூழல்
நோதலைத் தவிர்த்தல் தேவை.

அறிவியல் தொழில்நுட் பத்தின்
ஆற்றலுக் களவே யில்லை
சிறியன சிந்தி யாத
திறனுளர் கையில் அஃது

அலைகடல் பரப்பை வென்று
ஆழமும் அளந்து தேர்ந்து
மலைகளின் உயரம் வென்று
வானெலாம் பறந்து தேடி

வித்துள தநனுள் ஆங்கோர்
வித்தகர் கையில் சேர்ந்து
புத்துணர்(வு) அடையு மாயின்:
புவிமகள் அதுபோல் தன்னுள்

வளங்களை யுடையாள்: அன்ன
வழிவகை தெரிந்தார் முன்னர்
விளங்குவள்: மானு டர்க்கு
வேண்டுவ தருவாள்: இங்கு

அன்னையின் கருவூ லத்தை
அழிவிலா(து) அடையும் ஞானம்
இன்னமும் பெற்றோ மில்லை
ஏற்புடைக் கலைகள் தேவை.

மலர்மது வுண்ணும் வண்டு
மலர் இதழ் அமர்தல் போல
நிலமகள் நோதல் இன்றி
நிறைபயன் நேர்தல் தேவை.

குழலைக் காப்போம்
பெரிய நாயக அறக்கட்டளை வெளியீடு, 1997.

# அன்னையே ஓர் ஐயம்

இயற்கை அன்னையே!
தன்னையும் வருத்தி, தாழாது உழைத்து
உன்னையும் வருத்தினால் தானே உதவுகிறாய்
இதுஉன் குணமா அல்லது கொள்கையா?

பாய்போல் விரிந்தும், படர்ந்தும், இருக்கும்
தாய் நின்னுடைத் தங்க மேனியை
மேழி கொண்டு கீறினால்தானே
விளைநில மாகிறாய்?
நடுங்கும் வரையும் நனைத்தால் தானே
நன்செய் ஆகிறாய்?

ஊற்று நீரை ஒளித்துவைத் திருக்கிறாய்
தோற்றுதல் என்னவோ தோண்டினால்தானே?
ஆற்றல்சேர் நிலக்கரி: அணிசெய் தங்கம்
இவற்றை
எட்டுதற் கியலா இடத்தில் அல்லவா
இருப்பு வைத்து இருக்கிறாய்: உனை
வெட்டு பவர்க்கே வேண்டுவ தருகிறாய்

அணுவினால் உலகை ஆக்கினாய்: அஃதெம்
கையிலா கிடைக்கிறது? கண்ணுக்கா தெரிகிறது?
அளப்பதற்கிலா ஆற்றலை அணுவுள் வைத்தாய்
பிளப்பவர் தானே பெறலாம் என்கிறாய்
அன்னையே,
இதுஉன் குணமா அல்லது கொள்கையா?

இயற்கை அன்னையே!
தன்னையும் வருத்தித் தாழாது உழைத்து
உன்னையும் வருத்தினால்தானே உதவுகிறாய்
இதுஉன் குணமா அல்லது கொள்கையா?

– அமுத சுரபி, தீபாவளி மலர், 1997.

## கடைசி அஞ்சலி

வான ஊர்தியின் வரிசை நின்றது
வாரிதிக்கலம் யாவும் வந்தன
கானம் ஊர்ந்திடும் வண்டி: சாலையில்
காணும் உந்துகள் வகையில் மிஞ்சின

வைய கத்தினைப் பாத்தி பாத்தியாய்
வகுத்த எண்ணறு கடல்கள், வெற்புகள்
பையப் பையவும் வந்து சேர்ந்தன
பரவும் வானொலிக் கருவி கோடியும்

மலரும் மாலையும் தாங்கி வந்தன
மனிதர் செய்துள கோள்கள் யாவையும்
நிலமி றங்கின: சாரை சாரையாய்
நிறையும் மின்அலைக் கருவி எண்ணில:

அண்ட மும்திரண் டங்கு வந்ததென் (று)
ஐய முற்றனன்: அருகில் சென்றநான்
கண்ட காட்சியோ விந்தை: மானிடர்
கண்டி லாதது: கரையறிந் திலாக்

காலம் என்றிடும் புதிரும் வந்துள
காட்சி கண்டனன். "கோடி கோடியாம்,
ஞாலம் என்பன யாவும் ஆள்வை நீ!
யாது யாம்இவன் காண்ப(து)", என்றனன்

'நேரம்' சொன்னது, "நண்ப! என்றுமே
நிற்ப தில்லையாம்: வந்த காரணம்
'தூரம் மாண்டது': மனித மேதைமை
சூழ்ந்து கண்ட பல் கருவி வென்றன

மலையின் வாரியின் தடைகள் நீங்கின
மண்ணும் வானமும் அண்டை ஆயினர்
'தொலைவு' மாண்டது: கடைசி அஞ்சலி
சொல்ல வந்துளம் யாங்கள் யாவரும்".

★ ★ ★

ஈரத்திற் கெமது நெஞ்சில்
இடமுள தெனினும் இன்று
தூரத்தின் மரணம் கண்டு
துயருற வில்லை: எம்மை

இனமெனப் பிரித்த தூரம்
எண்ணறு மொழிகள் பேசும்
சனமெனப் பிரித்த தூரம்
தரணியில் மனிதர் எங்கள்

நிறங்களைப் பிரித்த தூரம்
நெருங்கியாம் அன்பும் நட்பும்
பிறங்கிட வாழ்தற் கின்றிப்
பிரித்தெமைத் தடுத்த தூரம்

காடுகள் கடக்க முன்னோர்
கால் நடை நடந்து பட்ட
பாடுகள் சொல்லப் போமோ
பரிவிலாத் தடைக்கல் தூரம்

என்று நான் என(து) இனத்தர்
எய்திய வெற்றி எண்ணி
நின்றனன்: எனது நெஞ்சில்
நீள்கடல் பொங்கினாற் போல்

ஐயங்கள் எழுந்தெ ழுந்(து) அங்(கு)
அலைத்தன: தொன்று தொட்டு
வையகத் தலைமை ஏற்று
வாழ்ந்திடும் மனித சாதி

எழுப்பிய சுவர்கள் கோடி
இயற்றிய தடைகள் கோடி
விழுப்பம் ஒன் றறிந்தி டாத
வேற்றுமை வளர்த்து விட்ட

மலைகளின் ஓங்கி நிற்கும்
மலையிலை: பகைமை பொங்கும்
அலைகளின் அஞ்சத் தக்க
அலையிலை: சமயம், சாதிப்

பிளவினும் தன்ன லம் செய்
பிரிவினும், அழுக்கா றென்னும்
அளறினும் மனித சாதி
அஞ்சிடத் 'தூரம்' இல்லை

புறத்துள தூரம் வென்றோம்
போற்றுதற் குரிய தான
தரத்தது: நாம் படைத்த
தடைகளின் தூரம் வெல்லக்

கருவி என் கண்டோம்: மாந்தர்
கற்றன காணத் தக்க
பொருள்களில் தீர்வொன் றில்லை
புலன்களை விஞ்சி நிற்கும்

மெய்யறி(வு) ஆண்மை சேர்ந்த
வினை நலம் கூடு மாயின்
ஐயமொன் றில்லை: மாந்தர்
அமரருள் அமரர் ஆவர்.

– கலைமகள் தீபாவளி மலர், 1998.

## அடியும் முடியும்

விரியும் அண்டத்தின் விளிம்பினைக் காண
விழைந்தனம்: அத்திசை விரைந்தனம். ஆனால்
விளிம்பின் எல்லையும் விரிந்தது: விரிந்தது
விரிவதும் விரைவதும் 'விதி'யெனக் கண்டோம்
எல்லை இன்றெம்க் கெட்டா தென்பதை
ஏற்றனம்: நாளை அஃ தியல்வது கூடும்

★ ★ ★

பெரியது காணும் பீடு பின் பெறுகுவம்
சிறியதன் எல்லையைத் தேர்ந்திடத் துணிந்தோம்
துகளெனச் சிறுத்தன: துகளினும் சிறியதாம்
தூசெனக் கண்டு, தூசினும் நுண்ணிதாம்
அணுவினைக் கண்டோம்: அதையும் பகுத்தோம்
நுண்ணிய அணுவினும் நுண்ணிய பிரிவுகள்
பார்த்தோம்: அதையும் பங்கிட் டாய்வது
இற்றைநாள் எமக்கு இயல்வதொன் றிலை யெனும்
நிலையினை உணர்ந்தெம் நெஞ்சம் அயர்ந்தோம் .

★ ★ ★

முடியினைக் காணும் முடிவும் தகர்ந்தது
அடியினைக் காணும் ஆசையும் தோற்றது
கண்புலம் காண்டில காட்டும் தகையுள,
விண்புலம் கடந்து வெளியுல(கு) ஊடும்
தொலைவு நோக்கிகள் தோற்றன: தோற்றன.
நுண்ணிய காட்டும், நுண்ணிதின் நுண்ணிதாய்
அஃகிய* காட்டும், ஆடிகள் பயனில,
பரப்பின் எல்லையும் பார்த்திலம்: நுண்மையின்
திறத்தின் எல்லையும் தேர்கிலம்: எனினும்
வரையுளம் என்பதை மனதறிந் தேற்கும்
புரையிலம். மானிடம் பொன்றுவ திலையால்.
நாளையும் முயல்வோம். நண்ணிய கைப்படும்
காலமும் முயல்வோம். கைவிடல் ஒப்போம்.
கருவியின் எல்லையும் கருத்திற் கொண்டனம்.

★ ★ ★

புறத்தினில் அமைந்த பூதப் பொருள்களின்
திறத்தின் முழுமையும் தெரி கில மாயினும்
மனிதர்யாம் எனவே மானிடம் அறிகுவம்
இனியது பணியென ஏற்றுத் தொடங்கினம்
உடலினை ஆய்ந்தோம்: ஊனும் குருதியும்
திடம் செய் என்பும் தெளிந்தோம்: ஆயினும்
விண்ணின் உயர்ந்தது: வெளியின் விரிந்தது
நுண்ணிய யாவினும் நுண்ணிதாய் நுண்ணிதாய்
அஃகுவ காணும் ஆற்றல் பெற்றது
மனமெனும் வாமனன் வரையெதும் காண்கிலம்

★ ★ ★

* அஃகுதல் - சுருங்குதல், சிறிதாதல்

கருவி வேண்டிலம்: கண்களை மூடிய
இருளில் எம் பார்வை எல்லை யற்றது.
பாதையின் முடிவும் பயனும் காணும்
மேதைமை கருவியின் விரிவினில் இல்லை
காலம் கடந்து கண்கள் காணுமோ?
ஞால வாழ்வினில் நாளை என்பதைக்
கருவி காட்டுமோ: கருத்தின் சூட்சும
அருவம் யாவையும் ஆயும் தகையது:
ஆடியும் ஓடியும் அலைந்தும் பல்வழி
தேடியும் கண்டனம் சிந்தையே தெய்வம்.
மண்ணும் அதனுள்: வாரியும் அதனுள்:
விண்ணும் அதனுள்: வெளியும் அதனுள்:
தேவர்கள், அசுரர்கள் தெய்வப் பிறவிகள்
பலரும் யாவதும் யாத்த(து) எம் உள்ளம்.

அமுத சுரபி, தீபாவளி மலர், 1998

## குஞ்சுகளின் கோரிக்கை

எங்கட்கு நீங்கள் இறக்கையைக் கொடுங்கள்
இனிமேல் வானத்தில் இடமில்லை என்று கூறாதீர்
இடம் இருக்கும் உயரம் வரை நாங்கள் எழும்புவோம்.

எங்கள் கையில் விளக்கைக் கொடுங்கள்
எங்கும் நிறைந்துளது இருட்டென்று கூறாதீர்
இருள் தாண்டும் வரை நாங்கள் தொடர்ந்து நடப்போம்.

கப்பல் இல்லையெனில் கட்டுமரம் கொடுங்கள்
கடலலைகளின் பயங்கரம் பாடிக் கலங்கச் செய்யாதீர்
காற்றே பொறியாய்க் கைகளே துடுப்பாய்க் கரைசேருவோம்

காண வேண்டிய இலக்கின் திசையைக் காட்டுங்கள்
கல்லும் முள்ளும் நிறைந்த பாதை என்று கவலைப் படாதீர்
காடும் கடந்து, நதியும் நீந்தி, மலையும் ஏறுவோம்

எங்களைத் தேடவும், தேடித் திரியவும் விடுங்கள்
இதுவரை கண்டதன் பெருமை பேசியே காலம் கழிக்காதீர்
எங்கள் தேடலுக்கு எத்தனையோ உலகங்கள்
காத்திருக்கின்றன. ●

## டாக்டர் வா.செ.குழந்தைசாமி (குலோத்துங்கன்)

டாக்டர் வா.செ. குழந்தைசாமி கரூர் மாவட்டத்தில் வாங்கலாம்பாளையம் என்ற சிற்றூரில் பிறந்தவர். இந்தியாவிலும், ஜெர்மனியிலும், அமெரிக்காவிலும் உயர்கல்வி பயின்றவர். நீர்வளத் துறையில் டாக்டர் பட்டம் பெற்றவர்.

நீர்வளத் துறைப் பேராசிரியர்; தமிழகத் தொழில்நுட்பக் கல்வி இயக்குநர்; மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணைவேந்தர்; UNESCO ஆலோசகர்; அண்ணா பல்கலைக்கழகத் துணைவேந்தர்; இந்திராகாந்தி தேசியத் திறந்த நிலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் போன்ற பொறுப்புகளை வகித்தவர்.

நீர்வளத் துறையில் பல ஆய்வுக் கட்டுரைகளைப் படைத்துள்ள இவரது கண்டுபிடிப்பு ஒன்று Kulandaiswamy Model என்ற பெயரில் அத்துறை இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. உலக அளவில் நீர்வளத் துறை அறிஞர்களால் மதிக்கப்படுபவர். பல உயர்மட்டக் குழுக்களில் அங்கம் வகித்தவர்.

பல்கலைக்கழக மானியக் குழு (University Grants Commission), அனைத்திந்தியத் தொழில்நுட்பக்கல்விக் கழகம் (All India Council for Technical Education), அனைத்திந்தியத் தொழில் பயிற்சிக் கல்விக் குழு, தமிழகத் திட்டக் குழுமம் போன்ற பல நிறுவனங்களில் உறுப்பினராக இருந்தவர் சர்வ தேசியத் தொலை நிலைக் கல்விக் கழகத்தில் ஆசியாவின் துணைத் தலைவராகவும், காமன்வெல்த் நாடுகளின் பல்கலைக் கழகக் குழுவின் (Association of Commonwealth Universities, London) தலைவராகவும், இந்தியப் பல்கலைக் கழகங்கள் குழுவின் (Association of Indian Universities) தலைவராகவும் பணியாற்றியவர்.



இவருக்கு இந்திரா காந்தி தேசிய ஒருமைப்பாடு விருதும் (1988), மைய வேளாண்மை வாரியத்தின் வைர விழாச் சிறப்பு விருதும் (1991), வழங்கப்பட்டன. இந்தியப் பொறியியலாளர் நிறுவனம் The Institution of Engineers (India) இவரை இந்தியாவின் சிறந்த பொறியியல் வல்லுநர்களில் ஒருவராக 1991-இல் கௌரவித்தது.

இவர் ஆர்வம் காட்டும் மற்ற துறைகள் தமிழ் வளர்ச்சி, தமிழ் இலக்கியம், தமிழ் எழுத்துச் சீரமைப்பு ஆகியன. 'பொன்னி' இதழ் இவரை 1948-இல் பாரதிதாசன் பரம்பரையின் கீழ் அறிமுகப்படுத்தியது. 'குலோத்துங்கன்' என்ற புனை பெயரில் இவருடைய கவிதைகள் ஆறு தொகுதிகளாக வெளிவந்துள்ளன. இவருடைய நூல்கள் பல பல்கலைக்கழகங்களில் பாட நூல்களாக இடம் பெற்றுள்ளன. இலக்கியப் படைப்புக்காக யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம் 1980-இல் D.Litt., பட்டம் கொடுத்துச் சிறப்பித்தது. World Academy of Arts & Culture என்ற நிறுவனம், 1985-இல் அதன் ஏதென்ஸ் மாநாட்டில் கௌரவ டாக்டர் பட்டம் (Litt.D) கொடுத்துப் பெருமைப் படுத்தியது. 'அழகப்பா பல்கலைக்கழகம் 1997–இல் D.Sc., பட்டம் கொடுத்துக் கௌரவித்தது. மையப்பல்கலைக்கழகமான பாண்டிச்சேரி பல்கலைக்கழகம் 1997-இல் D.Litt., பட்டம் கொடுத்துக் கௌரவித்தது. 'வாழும் வள்ளுவம்' என்ற நூலுக்கு, 1988-இல் 'சாகித்ய அகாதெமி' விருது வழங்கப் பட்டுள்ளது. இந்தியக் குடியரசுத் தலைவர் 1992-இல் இவருக்கு 'பத்ம ஸ்ரீ' விருது வழங்கினார்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் (Tamil Academy, Madras) தலைவராகவும், ஆசிய இயல் நிறுவனத்தின் (Institute of Asian Studies) துணைத் தலைவராகவும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் (I.A.T.R.) துணைத் தலைவராகவும், தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் உறுப்பினராகவும், அகில இந்தியத் தொழில் நுட்பக் கல்விக் கழகத்தின் (AICTE) நிர்வாகக் குழு உறுப்பினராகவும், அகில இந்தியத் தொழில் நுட்பக் கல்விக் கழகத்தின் இளங்கலைப் பட்டக் கல்விக் குழுவின் தலைவராகவும், இன்னும் பல நிறுவனங்களில் உறுப்பினராகவும் இருந்து வருகிறார்.

- பாரதி பதிப்பகம்